Kmm0416

உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று மாதந்தோறும்வெளிவரும்

## ஒரு தமிழ்ப்பத்திரிகை.

"எனைத்தானு நல்லவை கேட்க வனைத்தானு
மான்ற பெருமை தரும்"—திருவள்ளுவர்.

தொகுதி கக.] ரௌத்திரி- ஹூ மார்கழி-மீ [பகுதி உ.
Vol. XIX. December—January-1920-1921. No. 2.

உள்ளுறை.

| | | |
|---|---|---|
| தமிழ்ப்புலவர்களுக்கு ஒருவேண்டுகோள்:— | சா. சிதம்பரன். | ௬௩ |
| இடைச்செருகல்:— | ஸ்ரீமத். K. S. நவநீதகிருஷ்ணபாரதி | ௬௫ |
| ஷை | உதவிப்பத்திராதிபர். | ௬௬ |
| இராமநாதவித்யாலயப் பரீக்ஷைத் தேர்ச்சிக்குறிப்பு:— | | ௬௮ |
| 13-ம் புறப்பாட்டும் உரையும் V:— | ஸ்ரீமத். S. வையாபுரிப்பிள்ளை. | ௬௯ |
| கூட்டுறவுமுறையின்வரலாறும் அதனைவளர்க்கும் முறையும்:— | ஸ்ரீமத். ஊ. சா. வேங்கட ராமையர். | ௭0 |
| "முன்னமேமுனியாகி" என்றதற்குச் சரிதம்:— | ஸ்ரீமத். ஜி. சதாசிவம்பிள்ளை. | ௭௨ |
| அகராதிநிகண்டு:— | பத்திராதிபர் | 193-208. |

பத்திராதிபர்—திரு. நாராயணையங்கார்.

மதுரைத்தமிழ்ச்சங்கமுத்திராசாலைப்
பதிப்பு.

வருஷம் ஒன்றுக்கு ரூ 4.] [தனிப்பிரதி அணா-8.
வெளிநாடுகளுக்கு ரூ 4—8—0.

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி கக.] ரௌத்திரி-ஹூ மார்கழி-மீ [பகுதி உ.

Vol. XIX. December—January-1921. No. 2

## தமிழ்ப்புலவர்கட்கு ஒரு வேண்டுகோள்.

செந்தமிழாம் நம் தாயைச் செம்மைசெய்வான் முன்வந்துழைக்கும் பெருங்கருணைப் புலவீர்காள்! நுமக்கு எனது பெ ும் பணிவைச் செலுத்தி எனது எண்ணத்திற்றோன்றிய சில புல்லுரைகளைப் புகல்கின்றேன். அவை நுங்கள் கொள்கைகளுக்கு ஏற்றதாயின் ஏற்பீர். இன்றேல் வேண்டாப்பொருள்களில் ஒன்றென விடுப்பீர்.

அவையாவையெனின் நமது தாய்மொழியாகிய தமிழ்மொழி பல்லாற்றானுஞ் சீருற்றிலகுவது வெள்ளிடைவிலங்கலேயாம். ஏற்றம் உளதாவதற்கேது வென்னையோ வெனின்? எப்பொருள்களையும் எளிதிற்றெரிந்துகோடற்கேற்ற சொற்களைத் தன்னிடத்தே நிரம்பப் பெற்றிருத்தலேயாம்.

அன்றியும் காலங்கட்கேற்பக் கிராமியச் சொற்களையும் தன்னுட்படுத்தி இயங்கும் ஆற்றலும் அமைந்துள்ளது. அவ்வாறு கூட்டிக்கோடற்கு நமது பண்டைய இலக்கண ஆசிரியர்கள் வடமொழியொன்றையே தமிழியைபுக்கேற்பத் திரித்துச் செந்தமிழில் இன்றியமையாவிடங்களிற் கொள்ளலாம் என விதிகூறிப் போந்தனர்.

அன்றித் தற்காலம்போலக் கண்டசொற்களெல்லாவற்றையும் கூட்டியெழுதுவதற்கு விதிகூறிற்றிலர். பண்டைய தமிழ்ப்புலவர்கள் வடமொழியுணர்ச்சியும் பெற்றிருந்தாராதலின், தாம்தா மியற்றும் செந்தமிழிலக்கியங்களில் இன்றியமையாவிடங்களில் வடமொழியைத் தமிழியைபுக்கேற்பத் திரித்துப் புணர்த்தனர். அதனால், தண்டமிழில் சொற்கள் மிகுதியும் பல்கி மேன்மையுற்றதேயன்றிக் குறைபாடு கொண்ட

தில்லை. இஃதன்றி அவ்வடமொழி எழுத்துக்களையே சேர்த்துக் கொள்ளுமாறு கூறிற்றிலர். சேர்த்துமிலர். மணிப்ரவாளநடையென ஒன்றுளதே? எனக் கடாவுவீராயின் மணிப்ரவாளம் என்ற அச் சொல்லையே உற்றுநோக்குவீரேல் அவ்வினா வழுவென்று விடுப்பீர். அது வடமொழியுந் தமிழ்மொழியும் இடையிடையே கலந்து வரையும் உரை நடையானதால் வடமொழியின் உருவங்குலையாதே வரைதல் வேண்டும். ஆதலின் மணி என்ற தமிழ்ச்சொல்லும் ப்ரவாளமென்ற வடமொழிச் சொல்லும் கூடியே ஒருபெயராய் அமைந்துள்ளது.

ஆகையால் இக்காலத்து எழுதும் உரைநடைக்கு இது விதியுமன்று வினாவுமன்றென விடுக்க.

சிறக்க, யான் தங்களை வேண்டிக்கோடல் என்னெனில்? இக்காலத்தே உரைநடைவரைவான்புகுந்த சிலரால் தமிழ் மிகச் சீர்கேடுற்றிருப்பதால் தமிழார்வமுடையார் ஒவ்வொருவரும் அக்கேட்டைப் போக்குவதற்கு முயலவேண்டியது ஒருதலை. முதற்கண் செய்யவேண்டியதென்னெனின்? தாம்வரையும் உரைநடைகளிற் பிறசொற்கள் விரவாது எளிதிற் பொருள் தெரிதற்கேற்ற தமிழ்ச்சொற்களாலேயே எழுதப் பயிறல்வேண்டும். இன்றியமையாவிடங்களில் வடமொழிச் சொற்களையும் தமிழிலக்கண விதி பிறழாது திரித்துக் கூட்டல்வேண்டும். இவ்வாறே முயல்வேமாயின் நமது தமிழ் பண்டைநிலைக்குக் கூடியவிரைவில் வந்து மேன்மை பெறுமென்று துணிந்து கூறுவேன். அவ்வாறு செய்யவேண்டுமென்றும் மன்றாடுகின்றேன்.

ஸிம்ஹம், ப்ரதாபம், ஹிம்சை, ம்ருகம், ஸ்பஷ்டம், வாத்ஸல்யம் என்றின்னன பலவற்றைத் தமிழிற் கூட்டியெழுதுவதனால் பிற்காலத்தே தமிழினது உருவத்தையறிதற்கு ஒருவழியுமின்றியொழியுமேயென மனங்கவன்று இதனைத் தங்கள் திருமுன்னர்ப் பணித்தேன். மனஞ் சென்றவழியே செய்வீராக.

மனம்போன போக்கெல்லாம் போகவேண்டாம்.

என்ற ஒரு நீதிமொழியை ஈண்டுக் குறிப்பிட்டு அறிவுறுத்துகின்றேன். இவ்வுரைநடையிற் காணும் பிழைகளுக்காகக் கடைக்கணிக்குமாறு மூதறிஞர்களை வேண்டுகின்றேன்.

இறைவனருளிலங்க.

இங்ஙனம் தங்கள் பணிவுள்ள,

சா. சிதம்பரன்.

மாணவன்

கரந்தைத் தமிழ்ச்சங்கம்.

# "இடைச்செருகல்."

சென்ற புரட்டாசிமாதச் செந்தமிழில் "உரைகாரர்களும் அண்மை விளியும்" என்ற விஷயம் ஸ்ரீமத். S. வையாபுரிப்பிள்ளையவர்களால் வெளியிடப்பட்டது. அதில் "அண்மைச்சொல்லே யியற்கையாகும்" என்ற சூத்திரம் சிங்கநோக்கு எனவும் னகரவீறு சிறப்புவிதிபெறுதலின் அஃதொழிந்த வேனைய கொள்ளப்படும் எனவும் பேராசிரியர் பாயிரங்கூறினர். ஆதலின் னகரவீற்றுச் சொற்களுக்கு "அண்மைச்சொல்லே யியற்கையாகும்" என்ற சூத்திரம் விதியாகாது என மறுத்திருக்கிறார்கள்.

இன்னும், பிள்ளையவர்கள் பண்டுக் கூறிய தமது கொள்கைக்கு மாறுகப் பேராசிரியர்தம் கூற்று இருத்தல்பற்றி அக்கூற்றையும் தள்ளுகிறார்கள். அடியார்க்குநல்லாரை இலக்கணவிஷயத்திலே தள்ளி பொதுக்கிய பிள்ளையவர்கள் பேராசிரியரையும் பிறரையும் ஒதுக்குதலொருவியப்பாமா.

"அண்மைச் சொல்லே யியற்கை யாகும்" என்ற சூத்திரத்தைச் சிங்கநோக்கெனக்கொண்டு செம்பொருள்கண்ட பத்திராசிரியரவர்கள் கூற்றைப் பேராசிரியர்கூற்றுப் பெரிதும் ஆதரிக்கிறது. அதனுள் "னகரவீறு சிறப்புவிதி பெறுதலின் அஃதொழிந்த வேனைய கொள்ளப்படும்" என்பதுவே பிள்ளையவர்களுக்குச் சாதகம்போலத் தோற்றப்படுகிறது. சிறப்புவிதிபெறும் னகரவீற்றை விலக்கியவர் சிறப்புவிதிபெறும் ளஎவீற்றுக்களையும் அங்ஙனமே விலக்குதல்வேண்டும். அவற்றை விலக்காதபொழுது னகரவிறுதியையும் விலக்குதல் கூடாது. ஆதலின் "னகர வீறு சிறப்புவிதிபெறுதலின் அஃதொழிந்தவேனைய கொள்ளப்படும்" என்றது இடைச்செருகலாம்.

இனி ஆசிரியர் நச்சினார்க்கினியார் கிழவோன் என்றதனீற்றை அன் ஆன் என்னும் ஈற்றுள் அமைக்காமல் ஓன் என்னும் ஈற்றுள் அமைத்தனராதலின் அது சிறப்புவிதிபெற்றதொன்றன்றாம். "அண்மைச்சொல்லே" என்றதற்கு உயிரீற்றுச்சொற்களெனப் பொருள்பண்ணிக்கொண்டு

அபனிடாத லளவீறுகளே ஒனே நம்பன் என்றுங்குவரும் அன்னே என் றற்றொடக்கத்தன அண்மைவிதியாதற்கு எச்சூத்திரத்துட் புகுத்திப் பொருத்துவோம் என் றிடர்ப்படுவதுவோ இலக்கணவாற்றல். பிள்ளையவர்களும் ஈண்டுத் தகுதியொடு சிந்திப்பார்களாக.

பிள்ளையவர்களது மறுப்புவரிசைகளை நோக்கும்பொழுது "வேழமுன் னைக்கலை யாய்ப்பிற வாய்ப்பின்னு மென்றழையாய்—மாழைமென் னேக்கி யிடையாய்க் கழிந்தது வந்துவந்தே" என்ற திருப்பாசுரம் நினைவிற்கு வருகிறது. பிறவுமன்ன.

இங்ஙனம்,

நவநீதகிருஷ்ணபாரதி.

ஸ்ரீ:

# இதுவுமது.

I. இங்கு எடுத்துக்கொண்ட பேராசிரியருரையின் றொடக்கத்தில் 'இத்திணைக்கண்' என்று சுட்டியது எத்திணையை? எனநோக்குவார்க்கு முன்பின் றொடர்பால் அத்திணை உயர்திணையென்றே புலப்படுவதாயிருக்கிறது. அதற்கு விரோதமாக அங்கு அஃறிணைபுகுவது அசம்பாவிதமாகையால் அவ்வுரையில் அஃறிணையுதாரணம் காட்டியிருப்பதும், இடைவெளியில் அஃறிணையென்ற பெயரை நுழைப்பதும் இடைச்செருகலாம்.

II. இன்னும், அவ்வுரையுள் 'னகரவீறு சிறப்புவிதி பெறுதலின்' என்று எழுதியிருப்பதும் 'குதிரை கோம்புடையதாதலால்' என்பதுபோலும் அசம்பாவிதமாயிருக்கிறது. எங்ஙனமெனில், னகரவீறு என்றது அன், ஆன், ன் என்னும் மூன்றீற்றுப் பெயர்களுக்கும் பொதுப் பெயரேயாம். அண்மைவிளியில் அம்மூவகையீற்றும்பற்றியதொரு சிறப்புவிதி ஓரிடத்தும் இல்லை.

III. 'அண்மைச்சொல்லிற்ககரமாகும்' என்ற சூத்திரம் அன்னீற்றுச் சிறப்புவிதியாதலால் அது னகரவீறுகுமென்று நண்பரவர்கள் கருதுவதாகத் தெரிகிறது. அதுவும் அன்னீற்றுச் சிறப்புவிதியாகாது. எனெனில் அச்சூத்திரவுரையுட் பேராசிரியரே அதனைச்சிறப்புவிதியென் றெழுதாது புறனடை விதியென் றெழுதிப் போந்தனர். புறனடைவிதியும் சிறப்புவிதியும் ஒன்றாகமாட்டாதென்பதை அவர் அறியாதவரல்லர். இதனை இலக்கணநூல்வல்லாரெல்லாரு மறிவர். ஆதலால், 'னகரவீறு சிறப்புவிதி பெறுதலின் அஃதொழிந் தேனைய கொள்ளப்படும்' எனப் பேராசிரியருரையி லெழுதப்பட்டிருக்கும் வாக்கியம் அவரெழுதியதன்றென்றும், யாரோ அறியாதார் தமக்குத் தோன்றியவா றெழுதிவைத்த இடைச்செருகலென்றும் அறியக்கிடக்கிறது.

IV. இனி அவர்கள் கல்லாடனாருரையொன்றையே தம்கக்ஷிக்குச் சாதகமாகக் காட்டியிருக்கிறார்கள். அவ்வுரை சங்ககாலக் கல்லாடனாருடையதன்றென்றும், அது பிற்காலத்துள்ளாரெவராலோ எழுதப்பட்டு இதுகாறும் ஒருவராலும் பயிலவும் எடுத்தாளவும்படாது தொகுக்கப்பட்டதொரு சிறுபகுதி என்றும் சென்ற செந்தமிழ்ப்பகுதியில் நிரூபிக்கப்பட்டிருக்கிறது.

ஆதலால் அது நச்சினார்க்கினியர் முதலிய உரையாசிரியர்களால் நன்கு மதிக்கப்பட்ட பேராசிரியருரையை மறுக்குமாற்றலுடையதாகாது. அன்றியும், பேராசிரியருரை நச்சினார்க்கினியர்க்கு முற்பட்டதாய் அவராலறியப்பட்டுப் பிரமாணமாயொப்புக்கொள்ளப்பட்டதாதலால் 'அண்மைச் சொல்லே யியற்கையாகும்' என்ற சூத்திரம் சிங்கநோக்கென்றும், அது மெய்யீற்றுக்குமுரியதென்றும் பேராசிரியர் கூறியதே நச்சினார்க்கினியர்க்கும் உடம்பாடென் றறியலாகும். அல்லாக்கால் அவர் அச் சூத்திரவுரையில், பேராசிரியருரையை எடுத்துக்காட்டி மறுத்துரைத்திருக்கவேண்டும். அங்ஙனமில்லாமையால் அவரும் பேராசிரியருரையை யுடம்பட்டவராகவே மெய்யீற்றுக்கும் உரியதென்று உய்த்துணருமாறு "நான்கீற்றண்மைச்சொல்லும்" எனப் பொதுப்பட எழுதிப்போந்தாரென நன்கறியலாகும்.

இளம்பூரணர், சேனாவரையர் ஆகிய இருவரும் உயிரீறென்று சிறப்பித்துக் கூறாமையால், பொதுப்பட மெய்யீற்றுக்கும் உரியதாகவே கொண்டனரெனத் தெளியலாம்.

ஆதலால் உரையாசிரியர், பேராசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் இந்நால்வரும் அடியார்க்குநல்லார்கொள்கையையே வெளிப்படையாயும் குறிப்பாயும் வெளியிட்டுவிட்டமையால் 'அண்மைச் சொல்லே யியற்கை யாகும்'என்ற சூத்திரம் உயிரீற்றுக்கே யுரியதென்னும் கொள்கை வலியற்றதாமென்று தோன்றுகின்றது.

இவ்விஷயத்தை விரிவாய் ஆராயவிரும்புவோர் தொல்காப்பியச் சொல்லதிகார உரைப்பிரதிகளை வைத்துக்கொண்டு செந்தமிழ்த்தொகுதி கஎ பகுதி-அல் ௩௬௯-ஆம் பக்கமுதல் ௪00-ஆம் பக்கம் வரையுள்ள விஷயங்களை வினாவிடையுடன் உற்று நோக்குக.

உதவிப்பத்திராதிபர்.

---

மதுரைத்தமிழ்ச்சங்கத்தார் ரௌத்திரி-௵ ஐப்பசி-மீ 9, 10, 11 (1920-௵ அக்டோபர்-மீ 25, 26, 27)-ஆம் தேதிகளில் நடத்திய சுன்னாகம் இராமநாதவித்யாலயப் பெண்மாணவர்களின் மேல் வகுப்புப் பரிசைஷகளிற் றேறிப் பரிசும், யோக்கியதா பத்திரமும் பெறும் மாணாக்கர்களின் விவரம்.



## I-வது வகுப்பு.

1. மாணிக்கம். சிவக்கொழுந்தம்மாள், இராமநாதவித்யாலயம், சுன்னாகம்............(முதற்பரிசு).

   மொத்த அம்சம் 600க்குப் பெற்ற அம்சம் 414½.

2. து. பராசத்திஅம்மாள், இராமநாதவித்யாலயம், சுன்னாகம் ............(இரண்டாவதுபரிசு).

   மொத்த அம்சம் 600க்குப் பெற்ற அம்சம் 374½.

## II-வது வகுப்பு.

1. த. மனோன்மணி அம்மாள், இராமநாதவித்யாலயம், சுன்னாகம். மொத்த அம்சம் 600-க்குப் பெற்ற அம்சம் 315.

2. ச. அன்னம்மாள், இராமநாதவித்யாலயம், சுன்னாகம். மொத்த அம்சம் 600-க்குப்பெற்ற அம்சம் 304½.

**B. இராஜராஜேஸ்வரஸேதுபதி.**
அக்கிராசனாதிபதி.
மதுரைத்தமிழ்ச்சங்கம்.

# 13-ம் புறப்பாட்டும் உரையும் V.

(செந்தமிழ்ப் பதினெட்டாந்தொகுதியின் ௪௯௬-ஆம் பக்கத்தொடர்ச்சி.)

இதுவரை செய்யுளிற் காணப்படுவனகொண்டே 'கிழவோன்' என்றது சோழனையேயாமெனக் காட்டுதற்கு நண்பரவர்கள் பலவாறாக முயன்றார்கள். அம் முயற்சிகள் சிறிதும் பயன்தரமாட்டாதொழிந்தமை "செந்தமிழ்"நேயர்கள் நன்குணர்வார்கள். இனிச் செய்யுளுக்குரிய பழைய வுரையினைக்கொண்டு அதன்கட் கூட்டிக் காட்டிய வினைமுடிபு வாக்கியத்துணின்று சில நியாயங்கள் வகுத்துத் தாம் எடுத்தபக்ஷிஙைய நிறுவுதற்கு முயலுகின்றார்கள். அவற்றை யிப்பொழுது முறைப்பட ஆராய்தல்வேண்டும்.

உரையிலுள்ள வினைமுடிபுவாக்கியம் வருமாறு:—

'களிற்றுமிசையோனாகிய இவன், யாரென்குவையாயின், நாடுகிழவோன்; இவன் களிறு மதம்பட்டது; அதனால் இவன் நோயின்றிப் பெயர்க'.

(a) இவ் வாக்கியத்துள், 'என்குவையாயின்' என்பதனை முதலாவதாக எடுத்துக்கொள்ளுகின்றார்கள். இது வினையெச்சமாதலால் 'நாடுகிழவோன்' என்னும் பெயர்கொள்ளமாட்டாதென்றுகூறி, இக்காரணத்தால் அப்பெயர் யாரென்பதன்விடையாதற் குரியதன்றெனக் கருதுகின்றார்கள்.

இங்ஙனமெழுந்த நியாயத்தை யாராயப்புகுமுன்னர் நண்பரவர்கள் கூறியமுடிபு எத்துணைப்பொருத்தமுடைத்தென உதாரணமுகத்தால் ஒன்றுநோக்குதல்வேண்டும். நாம் ஆராய்ந்துவருஞ் செய்யுளினைப் பெரிதுமொப்பதாய்ப் புறநானூற்றிலே பிறிதொருசெய்யுளுளது. அதன்கண் 'இவர்யாரென்குவையாயின், இவரே.......... நெடுமாப்பாரிமகளிர்' (புறம்-201) என வந்துளது. இங்கே 'என்குவையாயின்' என்பது வினையெச்சமாகும். இவ் எச்சம் வினைகொண்டு முடியுமேயன்றிப் பெயர்கொள்ளமாட்டாதென்பது யாவரும் அங்கீகரிக்க வேண்டுவதொன்றேயாம். எனினும் இத் தொடரில் 'இவர் யார்' என்பதற் குரியவிடை 'பாரிமகளிர்' என்பது சந்தேகத்துக்கிட-

யின்றி விளங்கிக் கிடக்கின்றது. ஆகவே 'என்குவையாயின்' என்பது வினைகொண்டுமுடியவேண்டியதாயிருத்தல்பற்றிப் பெயர் விடையாகாமற்போய்விடவில்லை. 'நுங்கோயாரென வினவின் எங்கோ சேரலாதன்' என்ற பதிற்றுப்பத்துரைப்பகுதியை (செய். 20) நோக்குக. இங்கே 'வினவின்' என்பது வினையெச்சமாதலின், அது வினைகொண்டு முடியுமேயன்றிப் பெயர்கொண்டு முடியமாட்டாது. எனினும் யாரென்ற வினுவிற்குப் பெயரே விடையாய் வந்துள்ளமை காணலாம். ஆகவே தமிழ்க்குவரம்பாகிய சங்கத்தான்றோர்களது வாக்கியங்களைப் பிழையென்றுகூறத் துணிந்தாலன்றி நண்பரவர்கள்கூறும் வாதம் நிலைபெறுமாறில்லையென்பது எளிதினறியக்கிடக்கின்றது.

இனி அவர்களால் தரப்பட்ட நியாயத்தை யெடுத்துக்கொள்வோம். 'என்குவையாயின்' என்பது 'எனின்' என்பதன்பரியாயமாகிய வினையெச்சமாதலால் அது 'நாடுகிழவோன்' என்னும் பெயர் கொள்ளமாட்டாது. இக் காரணத்தால் 'நாடுகிழவோன்' என்றபெயர் விடையாதற்குரியதன்றெனக் கொள்ளுகின்றார்கள். இங்கே விடையாய்வருஞ் சொல்லினது இலக்கணம் நிச்சயிக்கவேண்டுவதாயுளது. இதன்பொருட்டு விடையினைக்கொண்டுமுடிவதாக வொருசொல் கருதிக்கொள்ளப்படுகிறது. இச் சொல் வினையெச்சமாதலின் இது கொண்டுமுடியுஞ்சொல்லும் வினையாதல்வேண்டுமென்றமுடிபு பெறப்படுகிறது. ஆனால் இவ்வாதம் நிலைபெறவேண்டுமாயின் வினையெச்சச் சொல் விடையினையன்றிப் பிறிதொருசொல்லினையுங்கொண்டு முடியமாட்டாதென்பது இருசொற்குமுரிய பொருளியையினுற் சந்தேகமறத் தெளிவிக்கப்படுதல்வேண்டும். அஃதாவது 'என்குவையாயின்' என்னும் எச்சமானது கொண்டுமுடியுஞ்சொல்லும் 'யார்' என்னும் வினுவானது எதிர்பார்க்கும் விடைச்சொல்லும் வேறுவேறு தனிச்சொல்லாகாது ஒரு சொல்லாகவே யாண்டும் நிற்குமென்பது நண்பரவர்களது வாதத்திற்கு மர்மஸ்தானமாயுள்ளது. இவ்வாறு கொள்ளினன்றி அவர்கள்கூறும் நியாயம் பொருந்துமாறில்லை. தமது வாதத்திற்கு உயிர்நிலையாயிருக்கின்ற இவ் விஷயத்தை அவர்கள் யாண்டேனும் நிரூபித்திருக்கிறார்களா? நிரூபணஞ்செய்தல் தானும் யார்க்கும் எளியதொன்றா? ஓரிடத்தும் உண்மையாதல்செல்லாதவொன்றினை ஆதாரமாகக்கொண்டெழுந்த வாதமும் பயனுடைத்தாகுமா?

இது ஸம்பந்தமாக ஒன்றுமட்டுங்கூறி யமைகின்றேன். 'என் குவையாயின்' என்றசொல் வினவிற்குரிய விடையினைக்கொண்டுமுடிவ தாகும் என்ற அவர்களதுகருத்து உண்மையொடு பொருந்துவதா யின், வினவோடியைந்து 'என்குவையாயின்' வருமிடத்தெல்லாம் விடையும் வினையாகவே இருத்தல்வேண்டும். ஏனெனின்: இச்சொல் வினையெச்சமாதலின்; ஆகவே பெயர் விடையாய்வரும் இடங்களில், 'என்குவையாயின்' என்பதும் அதன் பரியாயச்சொற்களும் வினவோ டியைந்து வரமாட்டாவெனல்வேண்டும். அஃதாவது 'இது குற்றி யோ மகனோவெனில், குற்றி' என்ற வாக்கியம் இலக்கணவழுவுடைய தாய் முடியும்! இவ்வாறுள்ள குத்ஸித முடிபுகளைவிளைத்து ஹாஸ்ய ஹேதுவாய்நிற்குங் கொள்கைக்கு யாரே உடன்படுவர்!

'என்குவையாயின்' என்ற எச்சந்தான் எதனைக்கொண்டுமுடிவ தாகும் என்பதனை யொருசிறிது நோக்குவோம். இதற்கு 'இவர் யார் என்குவையாயின் இவரே பாரிமகளிர்' என்றவாக்கியத்தைப் பொருள் பற்றிப் பகுத்துச் சொன்முடிபினை யறுதியிடுதலே (analysis) போதிய தாகும். 'இவர்யார்' எனத் தாம் வினவப்பெற்றதாகக்கருதி அவ் வினு விற்குக் கபிலர் விடையிறுப்பதாக இவ் வாக்கியம் அமைந்துள்ளது. 'இவர் யார்' என்றது வினு அறியலுற்ற விஷயமாகின்றது. 'என்குவை யாயின்' என்பது 'என்று வினவுவையாயின்', 'என்ற வினு நின்னின் றெழுமாயின்' எனப் பொருள்படும். இவ்வாறு பொருள்படுதலின் இச்சொல் வினுவெழுகுறிப் புணர்த்திநின்றது. 'இவரே பாரிமகளிர்' என்றது விடைக்குரிய விஷயமாகும். ஆகவே மேலவாக்கியம்,

1. வினு. 2. வினுவெழுகுறிப்பு. 3. விடை.

என்ற மூன்று பகுதிகளையுடையதா யமைந்திருக்கின்றது. ஈண்டுக் காட்டிய வினுவெழுகுறிப்பு எதனைக்கொண்டு முடிதல்வேண்டும்? பொருளியைபு ஒன்றே இவ்விஷயத்தில் நாம் துணையாகக்கோடற் குரியது. அவ் வியைபுபற்றி நோக்குவதாயின் வினுவெழுகுறிப்பு விடைதருகுறிப்பினைக் கொண்டுமுடியவேண்டுமேயல்லது பிறிதொன் றினைக்கொண்டு முடியமாட்டாது. அஃதாவது 'இவர் யார்' என்குவை யாயின், கூறுவேன்: 'இவரே பாரிமகளிர்'—என வாக்கிய அமைதி யுற்றுப்பெற்றுநின்று 'என்குவையாயின்' என்ற எச்சம் 'கூறுவேன்'

என்ற முற்ருேடு முடிவதாகும். இவ் வாக்கியத்திற் போன்றே விபவகார விஷயமாகிய வாக்கியத்தின்கண்ணும் 'என்குவையாயின்' என்ற எச்சம் 'கூறுவேன்' என்பதுபோன்ற விடைதருகுறிப்பொடு முடிதற்பாலது. ஈண்டெல்லாம் விடைதருகுறிப்பு இல்லையேயெனின், அதனை வருவித்து வாக்கியமுற்றுறச்செய்து இலக்கணமுடிபுகோடலே தகுதியாமென் றறியத்தக்கது. நாடோடி ஸம்பாஷணை வழக்கில் வாக்கியம் சரியாய் முற்றுப்பெருதுநின்று பொருளையுணர்விக்குந் தொடர்கள் எத்தனையோவுள்ளன. அவற்றின்கண் எல்லாம் இருக்குஞ்சொற்கள் கொண்டே வாக்கியலக்ஷண அமைதி முற்றக்காட்டுதல் எனுமா? பொருள்செல்நெறிக்கு விருத்தமாய் இலக்கணமுடிபுகூறல் யாண்டும் இல்லையென்பதுமட்டும் நன்கு மனங்கொள்ளுதல்வேண்டும். யான் கூறியதொன்றே பொருள்செல்நெறி யென்பதனை மாணவரவர்களே தாம் எழுதியுள்ள ஒரு வாக்கியத்திற் சொல்லாமற் சொல்லியிருக்கின்றூர்கள். 'அதனை இடையிட்டுக்கூறிய தென்னையெனிற் கூறுவேன்' ('செந்தமிழ்'-XVI. 5-262-ம் பக். 2-வதுவரி) என்றெழுதிச்செல்கின்றூர்கள். இங்கே 'என்குவையாயின்' என்றதன்பரியாயமாகிய 'எனின்' என்ற வினையெச்சம் 'கூறுவேன்' என்ற விடைதருகுறிப்புடன் முடிந்திருத்தல் காணலாம்.

இங்ஙனமாக 'என்குவையாயின்' என்ற எச்சம் 'யார்' என்ற வினவிற்குரிய விடையினைக் கொண்டு முடியமாட்டாதென்பதே உண்மையாய் முடிதலின், நண்பரவர்கள் தொடுத்த வாதமும் அழிவெய்தியதாயிற்று.

(b) இனி, இவ் வினைமுடிபுவாக்கியத்தின்கண்ணே 'என்குவையாயின்' என்பதனையடுத்துக் காணப்படுகிற 'நாடுகிழவோன்' என்ற சொல் எடுத்துக்கொள்ளப்படுகிறது. இது 'முன்னும்பின்னு மியையாது தன்னந்தனியே யொரு தனிமொழியாயிருப்பதால்......விளிப்பெயரேயாகுமென அறியத்தக்கது' என மாணவர் வாதிப்பாராயினர்.

இவ் விஷயத்தைத் தனிப்பட எடுத்துக்கூறித் தமதுமுடிபிற்குத் தாம் முன் எழுதியவற்றின்வேருகப் பிறிதொரு நியாயம் வகுப்பார் போன்று நண்பரவர்கள் எழுதுகின்றூர்கள். ஆனல் இது தனிப்பட எழுந்ததொரு நியாயமாயின், இதன் உண்மை அவர்கள் முற்படக்

கூறிக்கொண்டதொன்றனைச் சார்ந்துநிற்றல் கூடாது; பிறிதோராற்றான், வேறுகாரணங்கொண்டு துணியப்படுதல்வேண்டும். இந்நெறியால் நாடுகிழவோன் முன்பின் இயைபின்றித் தனித்து நிற்கிறதென்பதனை யாண்டேனும் அவர்கள் நிரூபிக்கமுயன்றுள்ளார்களா? முயலவில்லை. இவன்யார் என்ற வினாவிற்கு 'நாடுகிழவோன்' என்ற பெயர் விடையாகமாட்டாதெனத் தாம் புதுவதாய்ப் படைத்துக்கொண்ட ஆச்சரிய முடிபினை யாதாரமாகக்கொண்டு, அச்சொல் முன்பின் இயைபின்றி நின்றதென அவர்கள் கருதினார்களாகல்வேண்டும். ஆனால் அம் முடிபு சிறிதும் பொருந்தமாட்டாதென எனது ஆராய்ச்சியின் நான்காம்பகுதியில் நன்கு நிறுவியுள்ளேனாதலின், அம் முடிபுடன் அதனையொட்டியெழுந்த இந் நியாயமும் அறவே வலியிழந்து ஒழிகின்றது.

(c) மேலதனையடுத்துக் 'களிற்றுமிசையோனாகிய இவன்' என்ற வினைமுடிபுவாக்கியப்பகுதி யெடுத்துக்கொள்ளப்படுகின்றது. இதினின்றும் வருபவன் சோழனெனச் சேரன் அறிந்திருந்ததாக அனுமானித்து நாடுகிழவோனென்றதனை விடையாகச் சேரன் வேண்டிலனென்று நண்பரவர்கள் துணிகின்றார்கள். இவ்வாறு விடையாகாதொழியவே, அது விளியேயாதல்வேண்டுமென்பது அவர்கள் கருத்து. சேரன் அறிந்திருந்தமை பின்வருமாறு ஊகிக்கப்படுகின்றது:—

(i.) 'களிற்றுமிசையோனாகிய இவன் யார்' என்பது 'என்குவையாயின்' என்ற அநுகாரக்குறிப்பின் புரோவாதமாதலால், அது சேரனாற் கூறப்பட்டதேயாகும். ஆகவே 'புலிநிறக்கவசம்....................மிசையோனே' என்ற தொடர்முழுதும் சேரனதுவாக்கே ஆதல்வேண்டும்.

(ii.) இத்தொடருள் 'எய்கணைகிழித்தபகட்டெழின்மார்பு' எனச் சோழன்மார்புவருணிக்கப்பட்டுளது இங்குஅவன் போர்செய்து புண்பட்டுவாராமையால் அது முன்புபட்ட புண்ணைக் குறித்ததாகவேண்டும். எய்கணை என்றதில் எய்தல் தொழிற்கு வினைமுதல் கூறப்படாமையால் அது யானெய்கணையென்றுகூறப் பெறிற் றற்புகழாமென்று விடுத்தற்குரிய சேரனையாதல்வேண்டும்.

(iii.) ஆகவே 'புலிநிறக்கவசம் பூம்பொறிசிதைய—எய் கணை கிழித்த பகட்டெழின் மார்பின்—மறலியன்னகளிற்று மிசையோனே' என்றவரிகள் களிற்றுமிசையோனைப் பண்டும் எதிர்ந்தபகைவனு மிவனேயெனச் சேரனது துணிபு கூறுவனவாகவே கொள்ளப்படும். அவற்றிற்கு இங்குவருபவன் முன்பு என்னோடு போரேற்றுவந்து விழுப்புண்பெற்ற பகைமையுடையான் என்று பொருள் கொள்ளுதல் வேண்டும். இங்ஙனம் சேரன் கூறுதலின் வருபவன் சோழனென்பதனை அவன் நன்கு அறிந்திருக் கின்றான்.

இம்மூன்றனையும் முறையே ஆராய்தல்வேண்டும். முதலாவதாக, 'களிற்றுமிசையோனாகிய இவன்' என்றது சேரன்வாயினின்றும் பிறந்ததன் அநுகாரந்தானென்பதை நோக்குவோம். இது செய்யுள் நோக்கியே நிச்சயிக்கற்பாலது. உரைகாரராற் கொடுக்கப்பட்டுள்ள அந்வயத்தினும் செய்யுளே பிராதான்யத்தின் மிக்கது. செய்யுளே நிகழ்ந்ததனை யுள்ளவாறு வெளிப்படுத்துவதாக நிற்பது. செய்யுளாற் பெறப்படு முடிபோடு அந்வயத்தாற்பெறப்படுமுடிபு சிறிதும் முரணுதல் தகாது. ஆதலால், செய்யுள் உணர்த்திநிற்பது யாதெனத் தெளிந்துகொள்ளுதல்வேண்டும். 'என்குவையாயின்' என்ற அநுகாரக்குறிப்பிற்குப் பூர்வத்திலுள்ள பகுதியே யாண்டும் புரோவாதமாதற்குரியது; அதற்குப் பிற்படவுள்ளது புரோவாதமாதல் ஒரிடத்துமில்லை. செய்யுளில் அநுகாரக்குறிப்பினையடுத்து முன்புள்ளது 'இவன் யார்' என்பது மட்டுமேயாகும். ஆதலால் இஃதொன்றே புரோவாதம் என்று சொல்லற்குரியது. சாதாரணமாக 'என்குவையாயின்' என்றதன்பின் விடை தொடங்கவேண்டுமென்று யாரும் எதிர்பார்ப்பார்கள். செய்யுளின்கண்ணும் அவ்வாறே யுளதென்பது எவனைக்குறித்துப் புரோவாதம் நிகழ்ந்ததோ அவனையே சுட்டிச்சொல்லத் தொடங்குகின்றமையால் அறியலாகும். அஃதாவது இவன் யாரென்று சேரன் வினவியவுடன் முடமோசியாரும் 'இவனே' என்று சுட்டியதுணர்ந்து விடைதருகின்றார். இவ்வாறே பிறவிடங்களிலும் வந்துள்ளமை காணலாம் (cf 'நுங்கோ யாரென வினவின் எங்கோ'; 'இவர் யாரென்குவையாயின் இவரே'). இங்ஙனமே பொருள்கொள்

ளற்பாலதென்பது உரையினாலும் நன்கறியக்கிடக்கின்றது. 'இவன் யாரென்று வினவுவையாயின் இவன்றான்........களிற்றின்மேலோன்' என்று உரையுளது. ஈண்டுக்காட்டியவற்றால் 'களிற்றுமிசையோன்' என்பது விடையின் பகுதியாகுமேயன்றியோராற்றானும் புரோவாதத்தின் பகுதி ஆதலில்லையென்பது நன்கு தேறப்படும்.

செய்யுளினின்றும் பெறப்பட்ட மேலைமுடிபோடு முற்றும் பொருந்தத்தக்கவாறே அந்வயத்தினை நாம் உணர்ந்துகொள்ளுதல் வேண்டும். அல்லாக்கால் செய்யுளும் அதன் பொழிப்பும் ஒருபுறமாகவும் வினைமுடிபு வாக்கியம் மற்றொருபுறமாகவும் வேறுபட்டு அந்வயம் சிறிதும் பயன்தாமாட்டாதா யொழியும். உலகவழக்கில் 'இவன் யார்' என் றொருவன் வினவியவழி இங்ஙனமாகிய இவன் இன்னன் என விடையிறுப்போன் தானே படைத்துமொழிதல் காணலாம். இது போன்றே, 'இவன் யார்' என்று சேரன்வினவ, 'களிற்றுமிசையோனாகிய இவன் நாடுகிழவோன்' எனப் புலவர் விடையிறுப்பதாக அந்வயத்தினைக் கொள்ளுதல்வேண்டும். இங்ஙனங்கொண்டு பொருட்டொடர்புபட வாக்கியம் அமைக்கும்போது வினாவின் முக்கியாம்சமாகிய 'யார்' என்பது மட்டுமே புரோவாதமாய் அந்வயத்தில் எஞ்சிநின்றது. ஆகவே 'களிற்றுமிசையோனாகிய இவன் யாரென்குவையாயின் நாடுகிழவோன்'என்ற அந்வயவாக்கியத்தில்'களிற்றுமிசையோனாகிய இவன்' என்பது விடையின்பகுதியாய் மோசியாரது வாக்காகநின்றதெனலே செய்யுளோடும் பொழிப்புரையோடும் பொருந்துவதாகின்றது. புறநானூற்றுப் பதிப்பாசிரியரவர்களும் யான்காட்டியவாறே கொண்டு "களிற்றுமிசையோனாகிய இவன், யாரென்குவையாயின், நாடுகிழவோன்" என யாவர்க்கும் எளிதில் விளங்குமாறு புள்ளியீடு செய்திருக்கின்றார்கள். யாரென்ற வினாவிற்குக் 'களிற்றுமிசையோன்' என்பதனை விடையாக்குதலாற் பயனில்லை; வினாவிற்குரிய விடையினைச் செவ்வனே யெடுத்துக்காட்டற்குவேண்டி அத்தொடரை நேர்விடையோடு சார்த்தாது முற்படக்கூட்டி வினைமுடிபுகாட்டிய வுரைகாரரை நாம் மயங்கி யுணரலாகாது.

இங்ஙனமாக, 'களிற்றுமிசையோனாகிய இவன்' என்றது 'என்குவையாயின்' என்ற அநுகாரக்குறிப்பிற்குரிய புரோவாதமன்றாம். எனவே அது சேரனது வாக்காதலும் இல்லை. ஆதலால், 'இவனே, புலி

றிக்கவசம்...............களிற்றுமிசையோனே' என்ற செய்யுட்பகுதி சேரனது புரோவாதத்தை அநுகரித்ததன்றெனல் எளிதினுணரத்தகும். 'புரோவாதம்' 'அநுகாரம்' என்று நண்பரவர்கள் கூறியதனையே யானும் எடுத்தெழுதியவளவில், உண்மையாகவே சொல்லொடுபட்ட வினவொன்று நிகழ்ந்ததெனவெண்ணிக்கொள்ளுதல் தவறாகும். 'என்குவையாயின்' என்ற சொல்லின்பொருளை யுற்றுநோக்கும்பொழுது அங்ஙனமொரு வினவெழுந்ததாகக் கருதுதற்கே இடனின்று. சேரனது நெஞ்சிடை நிகழ்ந்ததனைக் குறிப்பினுணர்ந்து புலவர்—தாமாக வினவும் விடையுமா யறிவுறுக்கின்றாரெனலே பொருத்தமுடையது. இம் முறையானோக்குமிடத்துப் புரோவாதமே இல்லையென்பது உணரற்பாலது. 'களிற்றுமிசையோனாகிய இவன்' என்றதனைச் சேரனது கூற்றாகக்காட்ட நண்பரவர்கள்முயன்றதற்கு உத்தேச மொன்றுண்டு. சேரனது முன்வருவோன் சோழனேயென அவன் அறிந்துள்ளானென்பதே அவர்கள் கைக்கொண்டமுடிபு. சோழனை முன்னொரு சந்தர்ப்பத்திற் சேரன் நேரிட்டறிந்திருந்தாலன்றி இப்பொழுது கண்டவுடன் இன்னானெனத் துணிதல் கூடாதாகலின் அவ்வாறாய சந்தர்ப்பமொன்றுளதாதல் செய்யுளாற் பெறப்படுவதாக நண்பரவர்கள் நிரூபிக்கவேண்டியதாவசியகமாயிற்று. இச் சந்தர்ப்பத்தினையும் சேரனே வெளிப்படுத்தல் தகுதியாமாகலின் அதனை அவனது புரோவாதமாகக் கொள்ளலாவதன்கண், பொருத்தமுபல்வதே நேரிதாய்முடிந்தது. புரோவாதமொன்று நிகழ்ந்ததெனக் கொள்ளினும் செய்யுள், உரை, அந்வயம்—இம் மூன்றனையும்நோக்க அஃது 'இவன் யார்' என்பதேயாகல்வேண்டும். ஆனால் இவ்விரு சொற்களினின்றும் நண்பரவர்கள் கருதிய சந்தர்ப்பம் ஓராற்றானும்—எத்துணை நுணுகிநோக்கினும்—பெறப்படுமாறில்லை. ஆதலால் வேறு சில சொற்களும் அவன் வாயினின்று பிறந்தனவாகக் காட்டுதல் அவர்களுக் காவசியமாயிற்று. இவ்விஷயத்தில் அவர்களுக் குறுதுணையாக அந்வயவாக்கியம் உதவுவதுபோல் தோன்றவே அதனைமட்டுங் கைக்கொண்டு, அதன் பொருணிச்சயத்திற்கு ஆஸ்பதமாயுள்ள செய்யுளையும் உரையையும் மெல்லக் கைந்நெகிழவிட்டு, 'களிற்றுமிசையோனாகியஇவன்' என்பதும் சேரனது புரோவாதமாகும் என்று துணிந்தார்கள். இவ்வாறு துணிந்த அளவில் புலிநிறக் கவசம் பூம்பொறி சிதைய—எய்கணை கிழித்த பகட்டெழின் மார்பின்-மறலியன்ன களிற்றுமிசை யோனே' என்ற மூன்று

வரிகளும் நண்பரவர்களாற் கைப்படுக்கப்பட்டன. இனி இவ்வரிகளி னின்றும் மேற்கூறிய சந்தர்ப்பம் எவ்வாறு ஈர்த்துக்கொணரப்படுகின்றது என்பது பின்னர்க் காணப்படும்.

'இவனே, புலிநிறக்கவசம்.........மிசையோனே' என்ற செய்யுட் பகுதியிற் சேரனைக்குறித்து யாதொன்றுங் காணப்படவில்லை. இங்ஙன மிருத்தலின், இம்மூன்றுவரிகளினுமுள்ள சொற்களில் யாதானு மொன் றன் துணைகொண்டு வேண்டுஞ் சொல்லை வருவித்துக் கருதியதனைச் சாதித்தலே கூடுவதொன்றாயிற்று. 'எய்' என்ற சொல்லினது வினை முதல் கூறப்படவில்லை. இச்சொல்லின் துணையினால் ஒரு வினைமுதலை வருவித்தற்குச் சௌகரியங்கிடைத்தது. இச்சொல் சேரனது புரோ வாதத்தினுட்பட்டதென்பது நண்பரவர்கள் கருத்தாதலின், மிக நுணுகி யாராய்ந்து காரணமொன்று தெரிந்து 'யான்' என்றதோரெழுவாயை வரு வித்து 'யான் எய்கணை' யெனமுடித்துச் சேரனைச் செய்யுளுட் புக விடுத் தார்கள். இவ்வாறு சேரனைக்கொணர்ந்துபுகுத்தல் நியாயமுறையால் வலியுடையது தானா? முதலாவதாக, உரையை யெடுத்துக்கொள்க. அதன்கண் 'யான்' என்றசொல் வருவிக்கப்படவுமில்லை; சேரனெய்தகணை யென விளக்கப்படவுமில்லை. யானெய்கணை யென்றுகூறின், தற்புகழ்ச்சி யாய் முடிதலின் 'யான்' என்பது செய்யுளில் ஒழிக்கப்பட்டதாயின், அதனைக் கூறி விளக்குதல் உரைகாரரது கடமையாகும். அவ்வாறு அவர் செய்யாமையால் அவரது கருத்து மாணவர்கூறுவதன்றென்பது விளங்கும். இரண்டாவது, 'யான்' என்றதனை வருவித்துப் பொருள் கொள்வதாயின் அது பெரியதோர் அஸம்பாவிதத்திற் கொண்டுய்ப்ப தாகும். 'இவனே, புலிநிறக்கவசம்...........மிசையோனே' என்பது புலவரது விடையின்பாற்பட்டதென முன்னரே நன்கு விளக்கியுள்ளேன். ஆதலால் 'யான்' என்பது விடையிறுத்த முடமோசியாரையே குறிக்க வல்லது. இப்புலவரை வில்லேருழவராக்குவதற்குச் சிறிதும் ஆதார மில்லை; சந்தர்ப்பமும் இடந்தராது; நண்பரவர்களுக்குப் பயனுமில்லை. மூன்றாவது, 'எய்கணை' யென்றதன் வினைமுதல் கூறப்படாமை காரண மாக, எய்தவன் இரும்பொறைதானென்றுதுணிதல் தருக்கமுறை யாகாது. கூறியே தீரவேண்டுமென்ற ஆவசியகமில்லாதவிடத்துக் கூறப் படாததொன்றினின்றும் பிறிதொரு உடன்பாட்டுமுடிவு (positive conclusion) காணுதல் ஏற்புடையதாக மாட்டாது. நான்காவது,

பொதுப்பட விழுப்புண் நிரம்பியமார்பு எனக் கூறவிரும்புஞ் சந்தர்ப்பத்தில், இன்னூரால் நேர்ந்த விழுப்புண் என வருவித்துணர்தல் ஆசிரியர் கருத்துமன்று; அதனாற் பயனுமில்லை. ஒளிறுவாளருஞ் சமமுருக்கிக் களிறெறிந்துபெயர்தல் காளையோர்க்கெல்லாம் கடனென நினைத்த பண்டைக்காலத்தே-போர்க்குறிக்காயமே புகழின்காயமெனக் கொண்டு அடும்வினையில் மனமுடுகிநின்ற வீரர்பெருமக்கள் திகழ்ந்த புராதன காலத்தே-அலைமேலலைபடிப்பதுபோன்று மாற்றாதுபடை மீண்டு மீண்டு மேற்கிளம்பிவருவதனைத் தன்னிறந்துவாராமை விலக்கிப் பெருங்கடற்கோராழியனையனுய் எந்துவாள் வலத்தனொருவனுகிப் பொருதலே வாழ்வின்பயனெனக்கொண்ட வகையில்வீரர் அளவிலர் வாழ்ந்த நமது புராதன தமிழ்ப்பூமியிலே-ஒரு போரசன் விழுப்புண் நிரம்பிய மார்பனுயிருந்தான் என்றால் அஃது இன்னசமயத்து இன்னுரால் நேர்ந்ததென்று வெளிப்படக் கூறப்படினன்றிப் பிறவாறு அறிதல் கூடாதாம். பொதுப்படக் கூறியதொன்றிற்குக் காலதேசவர்த்தமானங் களைத் தாமே இயைந்துப் புதுவதொருபொருள் கண்டு அதனை யாதாரமாகவெடுத்து மேற்செல்லுதல் ஆராய்ச்சியாளர் கைக்கொள்ளவேண்டு முறைமை யன்றாம்.

முதலில் 'புலிநிறக்கவசம்' என்று தொடங்கும் பகுதியைச் சேனது புரோவாதத்தின் அநுகாரமாகக் கொண்டார்கள். பின், 'யான் எய்கணை' யென எழுவாயொன்றை வருவித்தார்கள். இவ்விரண்டும் உண்மைக்கும் நியாயத்திற்கும் மாறுனவையென்பது இதுவரை காட்டினேன். இனி அவர்கள் இப்பகுதியைப் பொருள்படுத்துப் பெருநற்கிள்ளியை இரும்பொறை முன்னரேயறிந்ததாகத் தாம்கூறுஞ் சந்தர்ப்பத்தினை விளக்குகின்றார்கள். அவர்கள் கூறும்பொருள் வருமாறு:—

| செய்யுட்பகுதி. | மாணவரவர்கள்கூறும்பொருள். |
| --- | --- |
| இவனே,<br>புலிநிறக்கவசம்பூம்பொறிசிதைய<br>எய்கணைகிழித்தபகட்டெழின்மார்பின்<br>மறலியன்னகளிற்றுமிசையோனே | இங்குவருபவன் களிற்றுமிசையோனுய்ப் பண்டும் எதிர்ந்த பகைவனே. |

இவ்வாறுகொண்டு முன்பொருகாலத்திற் போர்நேர்ந்ததன்மூலமாகச் சோழனையறிய இடம்வாய்த்தது எனக் கருதுகின்றார்கள். இவ்வுரை யுண்மைப்பொருளைத் தருவதாகுமா?

ஒருரையை உண்மையுரையெனக் கொள்ளவேண்டுமாயின், அதிற் காணப்படும் முக்கியமானகருத்துக்களில் ஒவ்வொன்றும் அதன்மூலத்தினு முளதாதல்வேண்டும். மூலத்திலுள்ள கருத்துக்களை விளக்குவதே உண்மையுரையின்நோக்கமாதலால், மூலத்திலில்லாதகருத்துக்களை-அவற்றுள்ளும் முக்கியமான கருத்துக்களை—உரையில் வருவித்துப் பொருள் கொள்வதாயின் அது போலியுரையாகுமேயன்றி உண்மையுரையாகமாட்டாது. உண்மையுரையெனப்படு மொவ்வொன்றும் இங்கே கூறிய நியதியிற் சிறிதும் பிழைத்தலாகாது. 'இங்குவருபவன் களிற்றுமிசையோனைப் பண்டும் எதிர்ந்தபகைவனே' என்ற தொடரில் இரண்டு முக்கியமானகருத்துக்கள் உள்ளன: இவை (1) இங்குவருபவன்; (2) பண்டும் எதிர்ந்தபகைவன் என்பன. 'களிற்றுமிசையோனைப்' என்பது 'பகைவன்' என்னும் பெயரைக்கொண்டு முடியும் 'எதிர்ந்த' என்னும் பெயரெச்சத்திலுள்ள வினையை விசேடிக்கு மாத்திரையாயுள்ளது; ஆகவே அது 'பண்டும் எதிர்ந்தபகைவனே' என்றதைநோக்க அப்ரதானமாயுள்ளது. நண்பரவர்களது உரையில் அதிமுக்கியமான கருத்தாகிய 'பண்டும் எதிர்ந்த பகைவனே' யென்பதற்குரியசொற்கள் யாதொன்றும் செய்யுளிற் காணப்படவில்லை. இங்ஙனமாக நண்பரவர்கள்கூறும் பொருளானது உரைகாரர்கள் கைக்கொள்ளவேண்டும் மூலநியமத்திற்கு முற்றும் விரோதமாயுள்ளது. இதுவொன்றே அவர்களது உரை பொருத்தமில்லையாதல் காட்டுதற்குப் போதியதாகும். அவர்கள் கொண்டபொருள் ஆசிரியராற் கருதப்பட்டதாயின், அப்ரதானமாகும்விஷயங்களைக்கூறிப் பொழுது போக்காது, பிரதானவிஷயமாகிய 'பண்டும் எதிர்ந்த பகைவன்' என்னுங் கருத்துப்படச் செய்யுளியற்றுவர். தமக்குப்பின் ஏதோவொரு காலத்தில் யாரேனும் உரைகாரரொருவர் வரலாமென் றுட்கொண்டு அவ்வுரைகாரர் பொருளுக்குயிர்நிலையாயுள்ள சொற்களைத் தங்கூரிய மனோபாவத்தாற் பெய்துகொள்ளுமாறு விடுத்துச் செய்யுள் செய்யார். அங்ஙனம் விடுத்தல் நல்லிசைப்புலமையின் லக்ஷணமுமாகாது.

அன்றியும், நண்பரவர்கள் கொண்டபொருளை யங்கீகரிப்பதாயின் அதினின்றும் பெறப்படவேண்டு மொரு சிறுமுடிபு உளது. அம்முடிபு ஒருகாலும் உண்மையாதல்செல்லாதாகலின் அதற்குக் காரணமாகிய உரையும் பொய்படுகின்றது. களிற்றுமிசையோன் என்றதிலுள்ள களிறு முன்பு இரும்பொறையோடு இறப்பிற் போர்செய்த அக்களிற்றைச் சுட்

டியதென்பதும், களிறே என்றதிலுள்ள களிறு நிகழ்ச்சியில் மதம்பட்டதெனத் தெளியப்பட்ட அக்களிற்றைச் சுட்டியதென்பதுமே மேற்கூறிய முடிபு. இதனை நண்பரவர்களே எடுத்துச்சொல்லியிருக்கிறார்கள். பண்டு ஊர்ந்துவந்தகளிற்றினையும் இப்போது கொண்டுசொல்லுங்களிற்றினையும் அடுத்துவைத்துப் பிற்கூறப்பட்டகளிறு முற்காணப்பட்டகளிற்றினையே குறிக்கிறதென்று வாசிப்போரெண்ணும்படி மயங்கச்செய்து, சந்தர்ப்பம் வெவ்வேறு என நினைத்தற்குத்தானும் வெளிப்படையாக யாதொன்றும் எடுத்துக்கூறாது புலவர்சிகாமணியாகிய முடமோசியார் செய்யுளியற்றினாரென்றுகொள்ளுதல் சிறிதேனும் பொருந்துவதாகுமா? நினைத்தகருத்து மிக எளிதிற்புலப்படுமாறு ஏற்றசொற் பெய்து பொழகுபயப்பப் பாடும் இயல்பினரன்றோ சங்கத்தான்றோர்கள்? இங்ஙனமாதலின், செய்யுளையும் முடமோசியாரது புலமையினையுங் குற்றங்கூறத் துணிந்தார்க்கன்றி ஏனையோர்க்கு வேறுவேறு சந்தர்ப்பங்களில் ஊர்ந்த களிறுகள் என்ற அநுமானவிஷயம் சிறிதும் அங்கீகாரயோக்கியமாகாது; அன்றியும் ஈரிடத்தும் ஒரேகளிறுதான் கருதப்பட்டதென்பது வேறொரு ஆவசியகத்தானும் வெளியாகும். சோழன் துஷ்டவிசாரத்தோடு வந்தவனல்லன் எனக் காட்டுதற்கு அவன் ஏறிவரும் அக்களிறே மதம்பட்டதெனக் கூறுதல்வேண்டும். 'களிற்றுமிசையோன்' என்றது வேறொரு சந்தர்ப்பத்தினை யுத்தேசித்தெனக்கூறின், களிறு மைந்துபட்டமைமாத்திரம் செய்யுள் அறிவிக்குமேயன்றி, சோழன் அக்களிறூர்ந்து வருகின்றமை அஃது உணர்த்தாது. எனவே குன்றக்கூறலெனுங்குற்றத்திற்கிடனாம். இதனாலும் இருவேறுகளிறெனக்கொண்டமை பிழையென அறியலாம். பழைய உரையினும் 'இவன்யாரென்று வினவுவாயாயின், இவன்றான்............கூற்றம்போன்றகளிற்றின்மேலோன்; இக்களிறுதான்' என்று காணப்படுகிறது. இதிலுள்ள இகரச்சுட்டு இச்சொல்லிற்கு முன்காணப்படுகின்ற களிற்றினையே குறிப்பதாகும். எனவே ஈரிடத்தும் நிகழ்வில் ஊர்ந்துவருங்களிறே குறிக்கப்படுகின்றமை புலனாம். இதனால் உரைகாரர்க்கும் நண்பரவர்கள்கூறும் சந்தர்ப்பவேறுபாடு அங்கீகாரமன்றெனல் தெளிவாகின்றது. மேலும் உரையின்கீழுள்ள அந்வயத்தில், 'களிற்றுமிசையோன் ஆகிய இவன்' என்று காணப்படுகின்றது. இதற்கு 'களிற்றுமிசையோனாய்வரும் இவன்' என்பதே தெளிவானபொருள். 'பூர்வத்தில் களிறூர்ந்து எதிர்பொருத இவன்' என்பது உரைகாரர்க்குக் கருத்தா

யின், அக்கருத்துப் புலப்படும்படி வாக்கியத்தை யமைத்திருப்பர். அங் ஙனஞ் செய்யாமையானே, 'பூர்வத்தில் ஊர்ந்த களிறு' என்பனபோன்றன நண்பரவர்களது கற்பிதமேயன்றி யுண்மையில் உளவல்ல வென்பது தெளிவாம். செய்யுளைவிளக்கவந்த வுரைகாரர் நண்பரவர்கள்கொண்ட பொருளை மனதில்வைத்து அந்வயவாக்கியத்தை யெழுதியிருப்பாராயின், உரைவகுத்த நோக்கத்தினையும் நிறைவேற்றமாட்டாமையோடு தமது கருத்துச் செவ்வனேவிளங்க வாக்கியமமைக்குந் திறமையு மிலராயின ரென வுரைகாரர்மீது குற்றங்கூற நேரிடுமென்பதும் அறியத்தக்கது. ஆகவே இருவேறு சந்தர்ப்பங்களிலூர்ந்துவந்த இரண்டுகளிறுகளைச் செய்யுள் கூறுகின்றதென்பது சிறிதும் கொள்ளற்பாலதன்றாம். இதனு னும் நண்பரவர்களது உரை யுண்மைப்பொருளைத் தெரிப்பதன்றெனல் விளங்கும்.

தாங்கூறுவதே பொருளெனத் தெளிதற்குக் காரணமொன்றும் அவர்கள் தருகின்றார்கள். அக்காரணமாவது 'வினைமுடிபுகூறுமிடத் துக் களிற்றுமிசையோனாகிய இவன் என்று இரண்டு வாக்கியத்தை யொன்றுபடக்கூட்டியுரைத்தமையே'. இவ்வாறு கூட்டியுரைத்தமையால் தாங்கூறும்பொருள் எவ்வாறுபெறப்பட்டது என்பதை அவர்கள் ஒரு சிறிது விளக்கியிருப்பார்களாயின் நலமாயிருக்கும். 'இவன் யார் என் குவையாயின்: இவனே களிற்றின்மேலோன்; களிறு மதம்பட்டது; நோயின்றிப்பெயர்க, நாடுகிழவோன்' எனச் செய்யுள் அமைந்துளது. இதனை நோக்குமிடத்து 'களிற்றின்மேலோன்' என்றது இவன் யாரென்ற வினாவின் செவ்வனிறையாகக் கருதப்பட்டதுபோல் தோன்று கிறது; ஆனால், இங்ஙனங்கொள்வதனாற் சிறிதும் பயனில்லை; இரும் பொறையது காட்சியிற் பட்டதனையே அவற்குக் கூறுவதாய் முடிபுமாக லின். எனவே செவ்வனிறையாக 'நாடுகிழவோன்' என்றதனையே கொள்ளுதல் வேண்டும். இவ்வாறு கொள்ளவேண்டும் விடையைத் தெளிவுபெற எடுத்துக்காட்டவிரும்பிய வுரைகாரர் 'களிற்றுமிசையோ னாகிய இவன்' என முற்பட எடுத்துக்கூட்டி யெழுதினார். உரைகாரரது நோக்கம் இங்ஙன மெளிதிலறியக் கூடியதாயிருக்கிறது. முற்படக்கூட்டி வினைமுடிபுகாட்டிய மாத்திரையில், இரும்பொறையும் பெருநற்கிள்ளியும் முன்பொருமுறை பொருதார்களென்பதும், அப்பொழுது பெருநற்கிள்ளி களிறூர்ந்து எதிர்ந்தானென்பதும், அவ்வாறு பண்டும் எதிர்ந்த பகை

வன் இவனேயென இப்பொழுது சேரன் தெளிந்தானென்பதும் பெறப் பட்டனவென்று கூறுதல் சிறிதும் ஏற்புடையதாகாது. ஒவ்வொரு முடிபும் காரணசகிதம் நிறுவப்படவேண்டுமென்ற தருக்கநெறிக்காக வேண்டி யாதானுமொன்றைக் காரணமாகக் கூறிக்கொள்ளுதல் தகாது.

இதுகாறுங் கூறியவற்றால் 'புலிநிறக் கவசம் பூம்பொறி சிதைய-எய்கணை கிழித்த பகட்டெழின் மார்பின்-மறலியன்ன களிற்று மிசை யோனே' என்ற அடிகளுக்கு 'முன்பு என்னொடு போரேற்றுவந்து விழுப் புண்பெற்ற பகைமையுடையான்' என்பதே கருத்தென்று மாணவநண்ப ரவர்கள் எழுதியது சிறிதுங் கொள்ளத்தக்கதன்றென்பது எளிதினுணர லாம். இப்பொருள் ஒன்றன்மேலொன்றாய் மூன்றுகூற்றுக்களை ஆதார மாகக்கொண்டது என்பதும் அவற்றுள் ஒவ்வொன்றும் பிழையாமென் பதும் நன்கறியத்தக்கது. இப்பொருளின்மூலமாய் வருபவன் சோழ னெனச் சேரன் அறிந்ததாகக் கூறுதல் பொருந்தமாட்டாது.

(*d*) இவன் நாடுகிழவோன்' என வினைமுடிபு வாக்கியத்திற் காணப்படாமையால் 'நாடுகிழவோன்' என்பது விடையன்று என நண்ப ரவர்கள் கூறுகிறார்கள். பனம்பாரனாது சிறப்புப்பாயிரத்துக்கு உரை யிடும்பொழுது இளம்பூரணர் தன்பெயரைத் தோற்றுவித்து அவ்வாறு தொகுத்தான்: அவன் யாரென்னில், தவத்தான் வரும் பல் புகழ்களை யுலகிலே நிறுத்தின தவவொழுக்கத்தினையுடையோன்' என்று எழுது கின்றார். இங்கே 'அவன்யார்' என்ற வினாவினது விடைக்குமுன் 'அவன்' என்னுஞ் சுட்டில்லாததுபற்றி அவ்வினாவிற்கு விடை வேறு காணவேண்டுமெனல் பொருத்தமுடையதாகுமா? இதுபோன்ற தொரு நியாயமே நண்பரவர்கள் கூறுவது. மேலும் நண்பரவர்கள் கூறும் ஸ்தானத்தில் 'இவன்' எனவொரு சுட்டிருப்பதே அனாவசியகமாகும். புரோவாதமொன்று நிகழ்ந்ததெனக்கொண்ட இடத்தும் அதன் அநு வாதமாய் வினைமுடிபு வாக்கியத்தில் எஞ்சிநிற்பது யார் என்னுஞ்சொல் லொன்றேயென மேலே நன்குவிளக்கியுள்ளேன். அவ்வாறுகொள்ளு மிடத்து 'யார்' என்பதற்குப் பூர்வத்திலுள்ள இவன் என்ற சுட்டு நாடு கிழவோன் என்ற பயனிலைக்கு எழுவாயாய்நிற்கும்; இப்பயனிலைக்கு முன்னும் ஒரு சுட்டினை வருவித்தல் வாக்கிய அமைதி அறியாதாரது செய்கையாகும். பதிப்பாசிரியரவர்களும் யான் கூறியவாறே கொண்டிருக் கிறார்களென்பதும் மேலேசொல்லியுள்ளேன். இவ்வாறு கொள்ளலொன்றே பொருந்துவது.

(e) வினைமுடிபுவாக்கியத்தில் 'நாடுகிழவோன்' என்பது முடிய வுள்ள சொற்றொடர்களில் ஒவ்வொன்றனையும் எடுத்துக்கொண்டு காரணங் கற்பித்து நாடுகிழவோன் என்பது விடையாகாதென நண்பரவர்கள் இதுவரை வாதித்தார்கள். இனி அதற்குப்பின் காணப்படுவன அனைத்தையுங்குறித்து ஒரு நியாயந் தொடுக்கின்றார்கள். யார் என்ற வினாவிற்கு 'நாடுகிழவோன்' என்பது விடையாயின் அதுகொண்டே முற்றிவிடுமாதலால் 'இவன்களிறுமதம்பட்டது' முதலியன வேண்டா கூறலாய் முடியும், அங்ஙனம் முடியாதிருக்கவேண்டுமாயின் 'நாடுகிழவோனை' விடையாகக்கொள்ளுதல் கூடாதென அவர்கள் துணிகின்றார்கள்.

வியவகாரரீதிக்கு இந்தநியாயம் பொருந்துமென வைத்துக்கொள்வோம். மாணவரவர்கள் நாடுகிழவோனை விடையாகக்கொள்ளுதல் கூடாதெனவிடுத்து 'நோயிலனாகிப்பெயர்க' என்றதனை விடையாக்கினார்கள். இது விடையாயின் இதுகொண்டே முற்றிவிடுமாதலால் 'களிற்றின் மேலோன்'; 'களிறு மதம்பட்டது'; 'நாடுகிழவோன்' என்பன வேண்டாது கூறலாம். இவ்வாறு நண்பர்தந்த காரணங்கொண்டே அவர்கள் கருதிய விடையையும் ஆசங்கித்தல் எளிது.

ஆனால் உண்மையைவிசாரிக்குமிடத்து, இவன்யாரென் றொரு வினா வெழுவதாயின் அதற்கு நேரே யுரியவிடையன்றிப் பிறிதொன்றும் விடையொடுசேர்த்துக் கூறப்படுதல்கூடாதென நண்பரவர்கள் நினைப்பது தவறெனல் வெளியாம். அங்ஙன மொருவினா நிகழ்ந்தபொழுது, இன்னானென நேரேவிடையிறுத்துப் பின் அவனைப்பற்றிக் கேட்போனறியவேண்டுமென்று தான்விரும்புகிற அனைத்தையும் அல்லது கேட்போன் அறியவிரும்பக்கூடிய அனைத்தையும் விடையிறுப்போன் கூறுதலே மரபாகும். பின்வரும் 212-ம் புறப்பாட்டுரையை நோக்குக:—

> 'நுங்கோ யாரென வினவின் எங்கோ கோப்பெருஞ்சோழன்;
> அவன் பசிப்பகையாகிப் பொத்தியொடு வைகலும் நக்குக்
> கோழியிடத்திருந்தான்.'

இங்கே கோப்பெருஞ்சோழன் என்ற நேர்விடையோ டமையாது வேறுசிலவும் கூறப்படுகின்றன. இவ்வாறே பாரிமகளிரை இருங்கோவேளிடம் கொண்டுசென்றபொழுது கபிலர் பாடியதாகவுள்ள 201-ம்

புறப்பாட்டினும் நேர்விடையேயன்றிப் பிறவுங் கூறப்படுதல் காணலாம். உலகவழக்கினும் இம்மரபு பயின்றுவருதல் சாதாரணமாயுள்ளதாம். இம்மரபும பயனற்றதன்று. 'இவன் யார்' என்று ஒருவனைச்சுட்டி வினா நிகழ்வதாக வைத்துக்கொள்வோம். விடையிறுப்போன் 'இவன் ராமன்; சாத்தன் புதல்வன்; இவன் ஈண்டுவருதலின் நிமித்த மின்னது' என்பது போன்ற மறுமொழியைத் தருகுவன். 'ராமன்' என்றுமட்டுங் கூறி நிறுத்துவனாயின், வினாக்களும் விடைகளும் மேன்மேலும் பிறக்கவேண்டியனவாயேற்படும்; அப்பெயர்மட்டுங்கொண்டு திருப்தியடைத லில்லையாகலின். இங்ஙனம் ஒன்றன்மேலொன்றாய்க் கிளைத்துவரக்கூடும் வினாக்களுக்குத் தனித்தனி விடையிறுக்கும் அசௌகரியத்தைநீக்குதற்கு வேண்டியே இம்மரபு ஏற்பட்டதாகும். பயன்பற்றியதோர் மரபுவழிப்பட்டுச் செவ்வனிறையோடு வேறுசிலவற்றையும் ஆசிரியர் கூறுதல் வேண்டாதுகூறியதாகாது. வேறுசில காணப்படுதல்கொண்டு தரப்பட்டுள்ள செவ்வனிறையும் விடையாகாமற் போய்விடாது.

'நாடுகிழவோன்' என்றவிடை யெழுந்தஅளவில் இன்னானென உணர்ந்துகொள்ளக்கூடிய சேரன் அந்நாடுகிழவோன் இங்ஙனம் வருவதற்குக் காரணமென்னென அறியவிரும்புதல் இயற்கை. அவ்விருப்பமறிந்து அதனைத் திருப்திப்படுத்தற்குவேண்டி 'இவன் களிற்றுமிசையோன்; இக்களிறு மதம்பட்டது; ஆதலின் இவனை இங்குக் காணநேர்ந்தது' எனச் சோழனதுவருகையின்காரணத்தை முடமோசியார் கூறுகின்றார். தாம் யாருடைய அடிநிழலிலே வாழுகின்றாரோ, யாருடைய அருளுக்குப் பாத்திரராய்த் தாம் விளக்கமெய்தினரோ அப்பேரரசனே இப்பொழுதுபகையகப்புக்குவருதலின் அவற்குத் தீங்குறுதல் கூடுமென்று சட்டென மின்வீழ்ந்ததுபோற் புலவரது மனத்தே பட்டது. அங்ஙனந் தீங்குவாராமற்செய்தலே தமக்குரிய பெருங்கடனாக எண்ணிய அவர், அவ்வரசன் தீங்கின்றித் தன்னாட்டிற்குப் பெயர்தலே தமது விருப்பமென்பதனைக் குறிப்பாற் சேரனுக்கு அறிவித்தல் கருதி, 'நோயிலனாகிப் பெயர்க' என வருவோனை வாழ்த்திக்கூறுகின்றார். இவ்வாறாக வேண்டாதுகூறியது யாதுமில்லையெனல் தெளிவாகின்றது. ஆதலால் இக்காரணம்பற்றி 'நாடுகிழவோன்' விடையாகாமற் போய்விடாது.

(*f*) வினைமுடிபு வாக்கியத்தில் ஒவ்வொருபகுதியையும் எடுத்துக்கொண்டு 'நாடுகிழவோன்' விடையாய்நில்லாது விளியாய் நின்றதெனத் தெளிவித்தற்குமுயன்றூர்கள். கடைசியாக இவ்வாக்கியத்தில் 'நாடுகிழவோன் என்ற (தங்கருத்தின்படி) அண்மைவிளி இடையிட்டுக் காணப்படுதற்கு ஒரு காரணந் தருகின்றூர்கள். 'களிற்றுமிசையோனுகிய இவன்யார்' என்னுஞ் சொற்றூடர் இரும்பொறை வார்த்தையின் அநுகாரமாகையால் அதன்முன்பே இரும்பொறையை விளிப்பதாகிய நாடுகிழவோனை வைத்தல் சரியன்றெனகிறூர்கள். ஆனுல் 'களிற்றுமிசையோனுகிய இவன்' அநுகாரமன்றென்பது மேலே என்னுல் நன்கு நிறுவப்பட்டுளது. அந்நிலையில் தாம் ஏதேனுமொன்று சொல்லத் தொடங்குமுன்பே சேரனைவிளித்து முன்னிலைப்படுத்துதல் இயல்பாகும். 'நாடுகிழவோன்' என்பது விளியாயின் அதனை யெல்லாவற்றிற்கு முற்பட வுரைகாரர் வைத்திருப்பரென்பது நண்பரவர்களது நியாயத்தினும் மிக்கதோர் வன்மையுடையதாகும். அங்ஙனமுற்படக்கூறுமையானும் செய்யுளிற் கடைசியிலிருந்த அதனை 'இவன்யார் என்குவையாயின்' என்றதனை அடுத்துவைத்தமையானும், அது விடையாகவே கருதப்பட்டதென்பது விளங்கக்கிடக்கின்றது.

மேலும் வினைமுடிபு கூறுமிடத்திலே 'நாடுகிழவோன்' என்பது வைக்கப்பட்ட ஸ்தானத்தை நண்பரவர்கள் கூர்ந்தாராய்வதன்பயன் விளங்குதற்கரிதாயிருக்கிறது. சேரனும் புலவரும் நிகழ்த்தியதாக எண்ணப்படும் சம்பாஷணத்தைச் செய்யுளே சரியாகக் காட்டுவதன்றி வினைமுடிபுகூறும் உரைப்பகுதி காட்டாதாம். தாங்கூறுவனவற்றைப் பராமுகமின்றிக்கேட்டற்பொருட்டே அண்மைவிளி நிகழ்ந்ததென்னும் அவர்களது கொள்கை உண்மையாயின், அவ் அண்மைவிளிச்சொல்லைச் சொல்லவேண்டுவன யாவுஞ் சொல்லிமுடிந்ததன் முடிவில்வைத்தல் பொருத்தமாகுமா? முடிவில்வைத்துச் செய்யுள்செய்திருப்பதனுலேயே பராமுகமின்றிக் கேட்பித்தற்பொருட்டு இச்சொல் புலவரால் வழங்கப் பட்டதன்றென்பது வெளியாகின்றது. ஆதலால் அதனை விடையாக் குதலினுங்காட்டிற் சிறந்ததொருநெறி இல்லையென்பதே முடிவாகக் கொள்ளப்படுதல்வேண்டும்.

இப்பகுதியில் எழுதியவற்றுல், மாணவரவர்கள் வினைமுடிபுவாக்கியத்துணின்று அரிதில் திரட்டித்தந்த நியாயங்களெல்லாம் 'நாடுகிழ

வோன் விளியாம்' என்னும் அவர்களது முடிபினை நிலைநிறுத்துதற்குச் சிறிதுந் துணைபுரியமாட்டாவாபொழிந்தமை அறியலாகும்.

## முடிவுரை.

இப்பகுதியோடு 'இவனியாரென்னும் புறப்பாட்டாராய்ச்சி' யைப் பற்றியெழுந்த எனது ஆராய்ச்சியுரை முடிவெய்துகின்றது. செய்யுளுரை இரண்டிலும் அமைந்து கிடக்குஞ் சரித்திரமென்றுகொண்டு சில சில மாணவரவர்கள் எழுதியுள்ளார்கள். அவற்றையும் ஆராய்ந்தெழுத வேண்டுமென்று முன்பு யான் எண்ணியதுண்டு. இதற்கு ஆவசியகமில்லையென நினைத்து விடுக்கின்றேன். 'இவன் யார்' என்ற வினாவிற்கு 'நாடுகிழவோன்' என்றதே விடையாதல் பற்றி, நாடுகிழவோனெனச் சோழனே குறிக்கப்படுகிறானென்ற முடிபுதான் யான் இத்துணையும் ஆராய்ந்ததன் பயனாகும். ஆனால் இவ்வாராய்ச்சியால் வேறுசில முக்கிய விஷயங்களும் விளங்கின. அவற்றுள் அதிமுக்கியமான சில வருமாறு:—

(1) மகோததி என்பது இந்தியாவின் குணபாலுள்ளகடலுக்குப் பிற்காலத்தார் வழங்கினபெயர்.

சங்கத்தான்றோர் இப்பெயர் வழக்கினையறிந்தார்களென்பதற்கு லக்ஷியமில்லை.

(2) 'அண்மைச்சொல்லே இயற்கையாகும்' என்ற தொல்காப்பியச்சூத்திரம் நான்கு உயிரீற்றுச் சொற்களுக்கு மட்டுமே ஏற்புடைய விதி.

(3) சங்கநூல்வழக்கின்கண்ணே எகாரம் அடுத்த ஒனீற்றுச் சொற்கள் யாண்டும் படர்க்கையாகவே வந்துள்ளன.

(4) இவன் யார் எனற வாய்பாட்டிலுள்ள வினாக்களுக்குப் பெயரேயல்லது வினை விடையாதல் இல்லை.

*S.* வையாபுரிப்பிள்ளை,

திருவனந்தபுரம்.

---

உ

கடவுள் துணை.

# கூட்டுறவுமுறையின்வரலாறும்,

## அதனைவளர்க்கும் முறையும்.*

(கும்பகோணம்-டவுன்-ஹைஸ்கூல்-தமிழ்ப்பண்டிதர்
ஸ்ரீமான்-ஊ. சா. வேங்கடராம ஐயர் எழுதியது.)

### 1. இந்தியாவிற்கு ஆதாரம் விவசாயமே.

ஆதிகாலந்தொடங்கி நமது நாட்டிற் பெரும்பாலோர், அனைவர்க்கும் உயிர்வாழ்க்கைக்கு இன்றியமையாததாகிய உழுதொழிலைக்கைக்கொண்டவர்களாய்ச் சுகாதாரக்கேடுமுதலிய தொல்லைகளைச் சிறிதும்பெற்றிராதனவும், பொன்விளையும் 'சுரங்கங்கள்' எனப் பொருளாதார சாஸ்திரிகளாலே புகழப்பெற்றனவுமாகிய கிராமங்களிலே வாழ்ந்துவந்தனர். அவர்களிற் சிலபொருளாளர் கிராமவாசத்தைக்காட்டிலும் நகரவாசத்தில் ஏதோ நற்பயன் இருப்பதாகக்கருதி அங்கே குடியேறி அதன்பயனாக நமது நாட்டையே வறுமையானநிலைமைக்குக் கொண்டுவந்துவிட்டனர். அதனால் அவர்கள் அடைந்ததும் துன்பமே. இப்படியிருக்க, இவர்களது பொய்யான ஆடம்பரங்களைப்பார்த்த சாமானியர்களிற்பலரும் கிராமங்களை விட்டுப் பட்டணங்களுக்குச் செல்வாராயினர். இதனால் நமது பெருமை பொருந்திய கிராமவாழ்க்கை தற்காலம் மிகத் தாழ்ந்தநிலைமைக்கு வந்துவிட்டது. அதிகம் சொல்லுவானேன்; அந்தக் கிராமங்கள் தற்காலம் பாலைவனங்களாக இருக்கின்றன என்பது மிகையாகாது. இங்கு, கிராமங்களின் முற்கால தற்காலநிலைமையை நன்னிலையிலே தொடங்கித் துக்கத்திலேமுடியும் ஒருநாடகத்துக்கு ஒப்பிடலாம். நிற்க; நமது கிராமங்களில்வசித்து உழுதொழிலைக்கைக்கொண்டு வாழ்ந்துவந்தவர்கள்

* இது, கும்பகோணம், துரைத்தன உயர்தரக்கல்லூரிப் போதகாசிரியர் ஸ்ரீமான் டி. கே. ஹநுமந்தராவ் (பி.ஏ., எல்.டி.,) அவர்கள், திருவாரூரிலே (22-!-21.) நடைபெற்ற தஞ்சைஜில்லாக் கூட்டுறவுமகாநாட்டிலே தலைமை வகித்தபொழுது செய்த முகவுரை உபந்யாசத்தின் சாரமாகத் தொகுத்தெழுதப் பட்டது.

அதிகமாகக் கல்வி அறிவு முதலியவற்றைப் பெற்றிராதவர்களாயிருந்தாலும் அவர்கள் தங்களது உழைப்பினல் அனைவர்க்கும் உண்ண உணவும், உடுக்க உடையும் கிடைக்குமாறு செய்துவந்தார்கள் என்பது இங்கே கவனிக்கத்தக்கது. நமது தேசபக்தருட்சிறந்தவரும், இந்தியப் பொருளாதார சாஸ்திரத்தில் வல்லுநரும் ஆகிய ஸ்ரீமான். இராதா குமார முகர்ஜீ அவர்கள் "இந்தியப்பொருளாதாரத்தின் அஸ்திவாரம்" என்ற தமது அரிய நூலிற் கூறியிருக்கிறபடி நம்முடைய கிராமங்களின் பழைய மேலான நிலைமையையும், தற்காலத்திய தாழ்ந்தநிலைமையையும் உற்று நோக்கில் எந்த உண்மைத்தேசபக்தனும் உள்ளபடியே மனங்கரையாமலிருக்கமுடியாது. அன்றியும், அவர் 'நமது நாடு தனது பழையபெருமையை அடையப் பாடுபடவிரும்புவோர் முதன்முதலில் தங்களது பிரசாரவேலையை இனிமேற் கிராமங்களிலேயே செய்யவேண்டும்' என்று வற்புறுத்துவதும் இங்கு அறியத்தக்கது. அந்நூலைப்படித்தபிறகு கைக்கொண்ட எனது சிறு அனுபவத்திலும் இம்முறை நல்லபயனைத் தரலாம் என்பது ஊகிக்கப்படுகிறது. அதுவும் இந்தக் கூட்டுறவுஇயக்க முறையினாலேதான் நிறைவேறும் என்பது எனது துணிபு. இதுவே அவருடைய கருத்தும்.

## 2. இந்தியாவிற் கூட்டுறவுஇயக்கத்தின் உற்பத்தி.

உலகமுழுவதும் விவசாயிகளின் நிலைமை ஒருமாதிரியாகவே இருந்துவருகிறது. விவசாயிகள் தங்களது தொழிலை இனிது நடத்திக்கொண்டு வாழ்வதற்காதாரமாக நமது சென்னைத்துரைத்தனத்தார் அவர்களுக்கு ஒருவகைக் கடன்கொடுத்து உதவிவந்தனர்; அம்முறை எதிர்பார்த்தபடி. ஏதும் பெரும்பயனைத் தந்துவிடவில்லையாதலினாலே 'பொருளாதாரவிஷயத்தில் விவசாயிகளுக்கு உபயோகமான 'பாங்குகளை ஸ்தாபிக்க என்ன என்ன முறைகளை ஆங்காங்குள்ள துரைத்தனத்தார் கைக்கொண்டுவருகிறார்கள்' என்பதைக் கண்டறிந்துவருமாறு இருபத்தெட்டுவருஷங்களுக்குமுன் (1892) நிக்கில்ஸன் என்பவரை மேல்நாடுகளுக்கு அனுப்பிவைத்தனர். அவர் அங்ஙனம்சென்று ஆங்குத் தாம் கண்ட அனுபவத்தைக்கொண்டு ஓர் அறிக்கையை வெளியிட்டனர். அதன்பயனாக இந்தியா கவர்ன்மெண்டார் ஒருசட்டத்தை (1904-ம் வருஷத்து 10-வது ஆக்ட்) இயற்றினார்கள். அந்தச் சட்டப்படிதான் தற்காலம் நமதுநாட்டில், ஜர்மனியில் ரைபிஸன் என்பவர் ஸ்தாபித்து

வந்த பாங்குகளைப்போன்ற 'ரூரல் சொஸைட்டி'களும், ஷூல்ஸ்டெலிட்ஸ் என்பவர் ஸ்தாபித்துவந்த பாங்குகளைப்போன்ற 'அர்பன் சொஸைட்டி' களும் ஸ்தாபிக்கப்பட்டுவருகின்றன. இதுதான் நமதுநாட்டில் இந்த இயக்கம் உற்பத்தியானதின் வரலாறு. இங்கு, ஜர்மனியில் இந்தமுறை எப்படித் தோன்றி வளர்ந்துவருகின்றது என்பதைத் தெரிந்துகொள் வது இன்றியமையாதது.

## 3. ஜர்மனியிற் கூட்டுறவு இயக்கம்.

முற்கூறிய ரைபீஸன் என்பவர் 1818-ம் வருஷத்திலே பிறந்தவர். அவர் தமது முப்பதாவது (1848) வயதில் தமது தேசத்திலுண்டான பஞ்சத்தால் உணவுப்பொருள் கிடைக்காது வருந்திக்கொண்டிருக்கும் ஏழைகளுக்கு இரங்கிச் சில பொருளாளரது உதவியையும் கூட்டுறவை யும் பெற்று ஏழைகளுக்கு வேண்டிய தானியம் ரொட்டி உருளைக்கிழங்கு என்ற மூன்றையும் மொத்தமாகவாங்கி நியாயமானவிலைக்கு அவர்களுக் குக் கொடுத்து உதவிவந்தார். அக்காலத்தில் இவர்கூட்டத்தார் ஏழை களுக்கும் அப்பொருளாளர்களுக்கும் இடையில் ஜாமீன்தாரர்களாக மாத்திரமே இருந்துவந்தனர். அப்பால் (1850) உழவர்களுக்குவேண் டிய கால்நடைகளையும் வாங்கிக்கொடுத்துவந்தனர். இங்ஙனம் இந்த முறை நற்பயனை அளித்துவர, அப்பால் (1862) இவற்றோடு பிறவற் றைத் தேடிக்கொள்ளப் பொருளும் அந்த ஏழைகளுக்கு எளிதிற் குறைந்தவட்டிக்குக் கிடைத்தாற் பெரிதும் நன்மையாயிருக்குமே என்ற கொள்கை உண்டாக, அப்பொழுதுதான் இப்பொழுது உள்ளனபோன்ற உத்தரவாதம் வரையறுக்கப்படாத 'ரூரல் சொஸைட்டி'கள் ஏழைகளைப் பங்குக்காரர்களாகக்கொண்டு உண்டாயின. 'ரூரல் சொஸைட்டி'தான் கூட்டுறவு இயக்கத்தின் முதல்உற்பத்தி என்றுசொல்வது பொருந்தாத தாம் என்பதும் இவ்வரலாற்றை ஊன்றி ஆராய்வார்க்கு இனிதுவிளங் கும். இவ்வரலாற்றை விரிவாக அறியவிரும்புவோர் காகில் என்பவர் 1913-ம் வருஷத்தில் ஆங்கிலத்துரைத்தனத்தாருக்கு எழுதியனுப்பி யுள்ள விரிவான அறிக்கையைப் படிப்பதால் தமதுகருத்தை நிறை வேற்றிக்கொள்ளலாம். இவ்வறிக்கை, மிஸ்டர். நிக்கில்ஸன் அறிக்கை வெளியான பலவருஷங்களுக்குப்பிறகு ஆராய்ந்து எழுதப்பட்டதாத லின் அதனினும் பலவகையில் விசேஷமானது என்பது சொல்லாமலே

விளங்கும். ஜர்மனியில் இந்த ரைபிஸன் என்பவரது முறையைப்பற்றி நடைபெறும் 'சொஸைட்டி'கள் கைக்கொண்டிருப்பன அடியில் வருவன:—

1. அங்கத்தினர் (பங்குக்காரர்.) ஒருவருக்கொருவர் அறிமுகமானவராகவும், உதவிசெய்துகொள்ளக்கூடியவராகவும் இருத்தற்குச் சாதகமாயிருக்கும்பொருட்டு விவகாரஎல்லை குறுகின அளவினையுடையதாக,—நானூறு ஜனங்களுக்குக் குறையாமலும், இரண்டாயிரம்ஜனங்களுக்கு மேற்படாமலும்,—இருத்தல்.

2. ஏழைகள் தடையின்றி அங்கத்தினராதற்குத்துணையாகக் குறைவான பங்குத்தொகையினை வாங்குவதாக,— (பங்குத்தொகையே இல்லாமற் சேர்த்துக்கொள்ளவேண்டு மென்பது மூலபுருஷரது கருத்து,)—இருத்தல்.

3. சாசுவதமானதும், எந்தக்காரணம்பற்றியும் எந்தக்காலத்திலும் பிரித்துக்கொடுக்கமுடியாததும் ஆகிய க்ஷேமநிதியை உடைத்தாயிருத்தல்.

4. உத்தரவாதம் வரையறுக்கப்படாத அங்கத்தினர்களைப் பெற்றிருத்தல்.

5. உபயோகப்படக்கூடிய பொருள்களை உண்டாக்கிக்கொள்வதற்கும், பிற இன்றியமையாத நற்காரியங்களுக்குமே பங்குக்காரர்களுக்குக் கடன்கொடுத்து உதவிவருதல்.

6. நீடித்தகாலத்திற்குக் கடன்கொடுத்துச் சிறிது சிறிதாகத் தொகையைத் திரும்ப வாங்கிக்கொள்ளுதல்.

7. ஒவ்வொரு பங்குக்காரரும் இவ்வளவு தொகையைத்தான் 'சொஸைட்டி'யிற் சேர்த்துவைத்துக்கொள்ளலாம் என்பதையும், ஒவ்வொரு பங்குக்காரரும் இவ்வளவுதொகைக்குமேற் கடன்பெறக்கூடாது என்பதையும் வருஷத்திற்கு ஒருமுறை எல்லாப்பங்குக்காரர்களும் ஒன்றுசேர்ந்து முடிவுசெய்து கொள்ளுதல்.

8. இலாபம் என்பதையே கருதாமலிருப்பதையும், அந்த வகையில் ஏதேனும் அங்கத்தினர்களுக்குப் பகுத்துக்கொடுக்கப்

படின் அது அபலார்க்குக் கொடுக்கப்படும் வட்டித்தொகைக்கு மேலாகாமல் இருக்கவேண்டும் என்பதையும் கவனித்து நடத்திவரல்.

9. எவ்வகை நிர்வாக உத்தியோகஸ்தர்களுக்கும் சம்பளம் கிடையாது என்பதையும், அவசியம் நேர்ந்தால் காரியதரிசிக்கு மாத்திரம் சம்பளம்கொடுத்துவருதல் என்பதையும் கைக்கொண்டு நடத்திவரல்.

10. அங்கத்தினர்களுக்கு நன்னடக்கையையும், நன்னிலைமையையும் வளர்த்துவருவதுடன் அவர்களது உழுதொழிலுக்கான கால்நடை முதலியவற்றையும் பிறகருவிகளையும் வாங்கி உதவுதலைக் கைக்கொண்டு நடத்திவரல்.

இந்த ரைபீஸன்முறையைப் பின்பற்றி 1910-ம் வருஷக்கடைசியில் ஜர்மனியில் சற்றேறக்குறைய 14,000 'சோஸைட்டி'கள் இருந்தன. ஒவ்வொரு 'சொஸைட்டி'யிலும் அங்கத்தினர்களின்தொகை சராசரி நூறுக்குஅதிகப்படாம லிருந்தது. தாம் இறப்பதற்குள் (1888) ரைபீஸன் என்பவர் 463 'சொஸைட்டி'களைத் தமது கண்ணுற்கண்டார். அக்காலத்தில் இந்த இயக்கத்தின் வளர்ச்சிக்குத் துரைத்தனத்தாரால் எத்தகைய உதவியும் கிடைக்கவில்லை என்பதும், ஏழைகளிடத்தில் இரக்கங்கொண்ட ரைபீஸன்போன்ற நற்குணம்வாய்ந்த பெரியோர்களது கூட்டுறவாலாகிய இடைவிடாஉழைப்பே பேருதவிபுரிந்துவந்தது என்பதும் கவனிக்கத்தக்கன. இப்பொழுதும் நமது நாட்டில் 'ரூரல் சொஸைட்டி' ஒன்றை ஸ்தாபிக்கவிரும்புவோரைப்பார்த்து "உங்கள் ஊரில் முதலில் ஒரு ரைபீஸனைக் கண்டுபிடியுங்கள்" என்று கூறும் வழக்கம் இருந்துவருகிறது. இத்தகைய பெருங்குணம்வாய்ந்த ரைபீஸன் இறந்தகாலத்தில் அவரது உழைப்பால் விசேஷநன்மையை அடைந்த ஏழைகள் "ஆ! எங்கள் தந்தையாகிய ரைபீஸன் என்பவரோ இறப்பது?" என்றுகூறி வருந்தியது ஓர் அதிசயமாகாது. நிற்க, ஜர்மனியிலுள்ள இந்த 'சொஸைட்டி'கள் அங்கத்தினர்களுக்குப் பொருளை 'மிகுத்துக் கொடுப்பது, கடன்கொடுப்பது' என்ற இரண்டுதுறையிலும் பாடுபட்டு வருகின்றன. அவற்றிற்கு வேண்டியதொகையில் சுமார் நூற்றுக்குத் தொண்ணூறுபாகம் அங்கத்தினர்களிடமிருந்தே பெறப்படுகின்றது.

மேலும், அங்கத்தினர்கள் ஒவ்வொருவரும் தத்தம் சக்திக்குத்தக்கவாறு சிறிதுசிறிதேனும் பொருளை மிகுத்துக்கொள்வதற்கு உதவியாகும் பொருட்டுப் பலவகையான மதிப்புள்ள,—தற்காலத்திய நோட்டுக்களைப் போன்ற,—சீட்டுக்களையும், தபால்தலைகளைப்போன்ற சிறுசீட்டுக்களையும் உண்டாக்கி அவரவரிடமிருந்து இயன்றவளவு தொகைகளைப்பெற்று மிகுத்துக்கொடுத்துவருகின்றன. இம்முறையன்றி 'உண்டிக்கலயம்' மூலமாகவும் மிகுத்துக்கொடுக்கின்றன. அங்கத்தினர் அல்லாதவர்களுக்கும் இந்தநன்மையைச செய்கின்றன. உதாரணமாக, ஒருகிராமத்தில் சற்றேறக்குறைய இருநூறு 'உண்டிக்கலயம்' உண்டாம். 'சொஸைட்டி'யின் காரியஸ்தரில் ஒருவர் ஒரு குறித்தநாளில் அந்த 'உண்டிக்கலயம்' இருக்கும் வீடுகள்தோறும்போய் அவற்றிலுள்ள தொகைகளை எடுத்து அவ்வவர்பேரால் வரவுவைத்துக்கொள்வார். பின்னர் உரிய காலத்தில் வட்டியோடுகிடைக்கும். இவ்வளவு கஷ்டப்பட்டேனும் ஏன் இத்தகையமுறைகளைக் கைக்கொள்ளவேண்டுமென்றால் "ஏழைகளுக்குப் பொருளைமிகுத்துக்கொள்ளும்துறையில் பழக்கத்தை உண்டாக்குவது அவசியமானது; அது 'சொஸைட்டி'களுக்கும் ஏழைகளுக்கும் பெரிதும் நன்மைபயக்கும்" என்று நியாயஞ் சொல்லப்படுகிறது. ஜனங்களுக்கு இம்முறையில் விசேஷநம்பிக்கை உண்டு. இதுவரையிற்கூறியன ரைபீஸன் என்பவர் முறை. இனி ஷுல்ஸ்டெலிட்ஸ் என்பவர் முறையைப்பற்றிச் சிறிது கூறுவது பொருத்தமானது. இவரது முறையைப் பின்பற்றியும் ஜர்மனியிலே பல 'சொஸைட்டி'கள் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. அவை, நிர்வாகிகளுக்கும் சிப்பந்திகளுக்கும் சம்பளம் கொடுத்துவரக்கூடியமாதிரியில் விரிந்த விவகார எல்லையினையுடையனவாகவும், உத்தரவாதம் வரையறுக்கப்பட்டனவாகவும், மாதவாரி வரும்படியுள்ளவர்கள் மிகுத்துவைப்பதற்கு உதவிசெய்யக்கூடியனவாகவும், ஏழைகளை 'லேவாதேவி'முறையிற் பழக்குகின்றனவாகவும். சராசரி அறுநூறுக்கு மேற்பட்ட அங்கத்தினர்களை உடையனவாகவும் உள்ளன. இம்முறையில் அங்கத்தினர்கள் ஒவ்வொருவரும் தங்களுக்குத் தாங்களே உத்தரவாதமாகியவர் என்பதும் பிறவும் கவனிக்கத்தக்கன. இங்கு ரைபீஸன் முறைமைக்கும் இவர் முறைமைக்கும் உள்ள வேறுபாடு நன்கு ஆராயத்தக்கது. இவர்முறையில் அங்கத்தினர்களின் தொகை பதினாயிரமாகவும் உயரலாம். அதனால்தான் இது கிராமங்களுக்குப்

பொருந்துவதில்லை. இம்முறை பெரிதும் இலாபம் சம்பாதிப்பவர்க்கே துணைசெய்வதாகும். இந்த இரண்டு முறைகளும் இந்தக் கூட்டுறவு இயக்கம் பிறந்த இடமாகிய ஜர்மனியில் இன்றும் நடைபெற்று வருகின்றன. தற்காலம் நமது நாட்டில் இந்த இருவர்களுடைய கற்பனையின்படி ஸ்தாபிக்கப்பட்ட இந்த இயக்கம் நடைபெற்றுவரும் முறைமைக்கும் அவை பிறந்தஇடத்தில் நடைபெற்றுவரும்முறைமைக்கும் உள்ள வேறுபாடு அறியத்தக்கது. இதனோடு நமது நாட்டில் 'தபாலாபீஸ்—சேவிங்க்ஸ் பாங்'கில் நூற்றுக்கு மூன்றேஅரைக்கால் வட்டிக்கும், 'பரஸ்பரசகாயநிதிபோன்றவைகளில் நூற்றுக்கு ஆறேகால்வட்டிக்கும் பத்துலட்சக்கணக்கிற் பொருள்வந்து குவிந்துகொண்டிருக்க, கிராமங்களிலும் பட்டணங்களிலுமுள்ள நமது கூட்டுறவு இயக்கத்திற் சேர்ந்த சகோதரர்களுக்கு நூற்றுக்குப் பத்துவட்டிக்குக் கொடுத்துதவக்கூட என் வேண்டியஅளவு கிடைக்கவில்லை? என்பதையும் பொருளாதாரநிபுணர்கள் ஆராய்ந்தறிவது இன்றியமையாதது.

### 4. இங்கிலாந்திற் கூட்டுறவுஇயக்கஉற்பத்தி.

இங்கிலாந்திலே மான்செஸ்டர் நகரத்திற்குச் சமீபத்திலே ராஸடேல் என்ற ஒரு சிறிய பட்டணம் உண்டு. அது சற்றேறக்குறைய 69000 ஜனங்களைக்கொண்டது; கம்பளிநெசவுக்குப் பேர்போனது. அந்தவியாபாரம் ஒருகாலத்தில் (1843) மிகவும் செழித்தோங்கி முதலாளிகளுக்கு விசேஷலாபத்தைக் கொடுத்தது. அப்பொழுது அந்த நெசவுசாலைத்தொழிலாளர்கள் தங்கள் முதலாளிகளைத் 'தங்களது சம்பளத்தைச் சிறிது உயர்த்திக்கொடுக்கவேண்டுமெனக் கேட்டுக்கொள்ள'த் தீர்மானஞ்செய்தார்கள்; ஒருபிரதிநிதிக்கூட்டத்தை அனுப்புவதாகவும் முடிவுசெய்துகொண்டார்கள். ஆனால், அது முதலில் 'பூனையின்கழுத்திலே மணியைக்கட்ட முடிவுசெய்த எலிகளின்கதை' யாயிற்று. எனினும், அப்பால் சிலர் பிரதிநிதிகளாகப்போய்வர முன்வந்தனர். அங்ஙனம் அவர்கள் சென்று கேட்டும் அவ்வேண்டுகோளுக்கு முதலாளிகள் செவிசாய்த்து இணங்கவில்லை. இதை அறிந்ததும் தொழிலாளர்கள் 'தாங்கள் இனி வேலைக்குப்போவதில்லை' என முடிவுசெய்துகொண்டார்கள். அதனோடு 'தங்களது தற்காப்புக்குத் தலைக்கு இரண்டுபென்ஸ்வீதம் வாரத்திற்கு ஒருமுறை கொடுத்து ஒருநிதி சேர்ப்பது' என்றும் முடிவுசெய்துகொண்டார்கள்.

இக்கிலேயில், அவர்களுள் ஒருவர் 'வேலைநிறுத்தம்செய்து முதலாளி களுடன்போராடுவது அறிவில்லாதவர்களும் மூடர்களும் செய்வதா கும்' என்றனர். அது நியாயமானதாக எண்ணப்பட்டது. எனினும், எந்தவழியிலும் முதலாளிகளிடமிருந்து நியாயம்பெறவேண்டியது என் பதை மறந்துவிடவில்லை. இப்படியாக அவர்களிற் பிறிதொருவர் "நம்மிடத்திலோ சிறிதும் பொருளில்லை. முதலாளிகளோ பெரும் பணக்காரர்கள். நமக்குவேண்டிய உணவுப்பொருள்களோ வியாபாரிகளிட மிருக்கின்றன. தரித்திரத்திற்குப்பயந்து நாம் 'ஏழைகள்விடுதி'க்குச் சென்று சுகமாய்ச் சாப்பிடலாமா? அது சோம்பேறிகளுடைய செய்கை யாயிற்றே; அன்றியும், அது தன்மதிப்பைக் குறைத்துவிடுமே. தேசாந் தரம் சென்றுவிடலாம் என்றாலோ அது தரித்திரனாகப்பிறந்த குற்றத் திற்காகத் 'தன்னைத் தானே தீவாந்தரசிட்சைக் குட்படுத்திக்கொள்வது போலல்லவோ ஆகிறது. அங்கும் இத்தகையதொல்லை நம்மைத் தொட ராதென்று எங்ஙனம் உறுதியாக நம்பமுடியும்?" என்று பலவாறாக ஆலோசனைசெய்தனர் அதன்பயனாகத் "தங்களது தற்காப்புக்கென இரண்டுபென்ஸ்வீதம் சேர்த்துவரும் தொகையைக்கொண்டு எல்லார்க் கும்பொதுவாக ஏதேனும் ஒருதொழிலைச்செய்து பெருமுதல் சம்பா திக்கவேண்டும்" என்ற முடிவு செய்யப்பட்டது. இம்முறையிற் பலர் நம்பிக்கைகொண்டனர். சிலர் நம்பிக்கையற்று விலக எண்ணலாயினர்.

இவ்வாறாக, ஒருஞாயிற்றுக்கிழமை மாலையில் மதுவிலக்குச்சங்கத் தில் எல்லாத்தொழிலாளர்களது கூட்டம் ஒன்று கூடியது. அக்கால் ஒருவர் 'நம்மவர்களது தரித்திரத்தை எப்படிப் போக்கிக்கொள்ளமுடி யும்? அதற்கு ஒரு வழிகாட்டுவது பேருபகாரமாகும்' எனக் கூறினர். கூறலும், ஒரு மதுவிலக்குக்காரர் 'நம்மவர்பொருள் பெரும்பாலும் குடிப் பதாலேயே அழிவுறுகின்றது. குடியை நிறுத்தி நமதுசம்பாத்தியத்தை வீட்டுக்குக் கொண்டுபோவோமானால் நம்மவர்க்குச் சிறிதும் கஷ்டம் வராது' எனக் கூறிமுடித்தார். பிறிதொருவர் "நமக்குச் சுயஆட்சி கிடைத்து விடுமானால் நிர்வாகிகள் அனைவரும் நமது 'வோட்' பலத்தி னாலே தெரிந்தெடுக்கப்பட்டவர்களாகவே இருப்பார்கள். அப்பொழுது நமக்குக் கஷ்டம் உண்டாகச் சிறிதும் இடமிராது. ஆதலின் நாம் அனை வரும் சுயஆட்சியைப்பெறுவதற்கு முயலவேண்டும்" எனப்பேசிமுடித்த னர். இதனை எல்லோரும் உயர்ந்ததாகவே எண்ணினர், இக்கிலேயில்

நெசவுத் தொழிலாளரில் ஒருவர் 'சுயஆட்சிகிடைத்தபிறகு நன்மையுண்டாகலாம் என்பது பொருத்தமானதே. அதுவிலக்கினும் நன்மையுண்டாகலாம். சுயஆட்சிகிடைக்கும் வரையில் எப்படிக் கஷ்டத்தைப் பொறுத்துக்கொள்கிறது? ஆகவே முற்கூறப்பட்ட அந்த இரண்டுதுறைகளில் முயன்றுவருவதோடு நம்மவர்க்கு வேண்டிய உணவுப்பொருள் முதலாயவற்றை நாமே வாங்கிவிற்று ஏன் லாபம் சம்பாதிக்கப்படாது?' எனக் கூறினர். இது எல்லோராலும் ஒருமனதாய் ஒத்துக்கொள்ளப்பட்டது. சிலநாட்களுக்கெல்லாம் தங்களது தொழிலைத் தொடங்குவதற்கு அங்கத்தினர்களைச் சேர்க்கவும், மூலதனம் சம்பாதிக்கவும் ஒரு கையொப்பச்சீட்டு வெளியிடப்பட்டது; அங்குள்ள தொழிலாளர்களுக்கெல்லாம் அது அனுப்பப்பட்டது. கையொப்பத்தொகையோ ஒவ்வொருவருக்கும் இரண்டு பென்ஸாகும். கையொப்பத்தொகையை வசூல்செய்ய மூன்று கௌரவ உத்தியோகஸ்தர்கள் நியமிக்கப்பட்டார்கள். ராஸடேல் குபேரர்களுக்கு இந்த இரண்டுபென்ஸைக் கொடுப்பதும் அப்பொழுது பெரிய கஷ்டத்தை விளைப்பதாயிருந்தது. கையொப்பத்தொகையை வசூல்செய்ய அந்தக் கௌரவ உத்தியோகஸ்தர்கள் ஒவ்வொருவரிடத்திலும் பலதடவைகள் செல்லநேர்ந்தது. இவ்வளவு கஷ்டப்பட்டாலும் அவர்கள் 'தங்கள்முயற்சி ஏழைகளுக்கு நன்மைசெய்யக்கூடியது' என்ற நம்பிக்கையுள்ளவர்களாதலினாலே தங்கள்தொழிலை ஒரு மதக்கடமைபோலப் பாவித்து ஊக்கத்தோடு முயன்றுவந்தார்கள். இவர்கள் இப்படிக் கஷ்டப்பட்டு வசூல்செய்த இருபத்தெட்டுப்பவுனாகிய அந்தச் சிறியதொகைதான் ஒரு குறித்தகாலத்தில் உலகத்தையே புதியதாக மாற்றும் முதற்கருவியாகிய 'கூட்டுறவுப்பண்டகசாலை'யின் உற்பத்திக்கு மூலதனமாகியது.

அப்பால் (24—10—1844.) அடியிற் குறிக்கப்படும் நோக்கங்களுடன் 'ராஸடேல் நியாயவாதிகள்சங்கம்' என்றபெயருடன் ஒருஸ்தாபனம் பதிவுசெய்யப்பட்டது.

### அதன்நோக்கங்கள்.

1, அங்கத்தினர்களுக்குவேண்டிய உணவுப்பொருள், உடைமுதலியவற்றை வாங்கிவிற்பதற்கு ஒரு 'கூட்டுறவுப்பண்டகசாலை'யை ஸ்தாபித்தல்.

2. ஒருவருக்கொருவர் உதவிசெய்துகொண்டு தங்கள் தங்கள் நிலைமையை உயர்த்திக்கொள்ள விரும்புகிற அங்கத்தினர்களுக்கு வீடுகளைப் புதுவதாகக்கட்டியோ விலைக்குவாங்கியோ கொடுத்தல்.

3. வேலைகிடைக்காமல் வருந்திக்கொண்டிருக்கும் தொழிலாளர்க்கும், வேலையிலிருந்து வரும்படிக்குறைவாற் கஷ்டப்படுகிறவர்களுக்கும் வேலைகிடைக்கவும், போதியஅளவு வரும்படி கிடைக்கவும் துணையாகப் பலதொழிற்சாலைகளை ஸ்தாபித்தல்.

4. விலைக்கோ அல்லது குத்தகைக்கோ நிலங்களை வாங்கி வேலை கிடையாத அங்கத்தினர்களுக்கு வேலைகிடைக்குமாறு செய்தல்.

5. அங்கத்தினர்களுக்குவேண்டிய பொருள்களை உண்டாக்கல், விற்றல், ஆளுதல் ஆகியவற்றிற்குத் துணையாகும்பொருட்டுக் குடியேற்றநாடுகளை ஸ்தாபித்தல்; தங்களை ஒத்த கொள்கையினையுடைய சங்கத்தார்க்கு உதவிபுரிதல்; என்பன.

கவனியுங்கள்! இருபத்தெட்டுத் தரித்திரர்கள்சேர்ந்தா இத்தகைய பெருமாறுதலை உண்டாக்கக்கூடிய காரியத்தைச் செய்வது?! என்று நம்மவருட்சிலர் நினைக்கக்கூடும். அது சரியே. ஆயினும், அவர்கள் தங்களது உறுதியான உழைப்பினால் இருபத்தைந்து வருஷத்திற்குள் தங்களது நோக்கத்திற் சரிபாதியைப் பூர்த்திசெய்து கொண்டமுறைமையிற் பெரிய வெற்றியைப் பெற்றுவிட்டார்கள். இன்னும் மேற்போய்க்கொண்டிருக்கிறார்கள். இனி, இந்த 'ராஸ்டேல் நியாயவாதிகள்சங்கம்' கொண்டிருந்த கோட்பாடுகளை அறிந்துகொள்வது பொருத்தமானது. அவை வருமாறு:-

1. தங்களது சொந்தமுதலைக்கொண்டே தொழிலை நடத்தல்.

2. இயன்றவரையில் நல்லசாமான்களையே வாங்கல்.

3. சரியான அளவு, நிறைகளுடன் கொடுத்தல்.

4. கொள்முதலுக்குக் குறைத்தாவது, அயல்வியாபாரிகளுடன் போட்டிபோட்டாவது விற்பதை நிறுத்திக் கடைவிலைக்கே விற்றல்.

5. அங்கத்தினர்கள் கடனாளிகளாகாவண்ணம் செய்ய எக்காரணம் பற்றியும் கடன்கொடுப்பதும், கடன்வாங்குவதும் கூடாது என்ற கொள்கையுடன் இருத்தல்.

6. எவரால் லாபம்கிடைத்ததோ அவர்களே அதனைத் திரும்ப அடையவேண்டியது என்ற நியாயத்தை நிலைநிறுத்தச் சாமான்வாங்கிய வீதப்படி லாபத்தைப் பிரித்துக்கொடுத்தல்.

7. சங்கத்தாற் கிடைத்தலாபத்தைச் சங்கத்திலேயே சேமித்து வைத்தல்.

8. சாமான்வாங்கியவர்களுக்கும், வேலைசெய்கின்றவர்களுக்கும் லாபம்கிடைப்பதற்கு உதவியாயிருக்கும்படி சேமித்துள்ள முதலுக்கு நூற்றுக்கு ஐந்துவீதம் குறைந்தவட்டி கொடுத்து வரல்.

9. தொழிற்சாலைகளிலுள்ள வேலையாளர்களுக்கு அங்கேகிடைக்கும் லாபத்தை அவர்கள்பெறும் சம்பளவிகிதப்படி பிரித்துக் கொடுத்தல்.

10. அங்கத்தினர்களின் அறிவை வளர்ப்பதற்காக லாபத்தில் நூற்றுக்கு இரண்டரைப்பங்கைக் கல்விக்காகச்செலவுசெய்தல்.

11. ஒவ்வொரு அங்கத்தினரும் ஒவ்வொரு 'ஓட்' உரிமையையே உடையவராயிருத்தல்.

12. குற்றச்செயல்களும்,போட்டிகளும் ஒழிவதற்காகக் குடியேற்ற நாடுகளை ஸ்தாபித்து அங்கும் இந்தமுறையை நிலைநிறுத்தல்.

13. மொத்தவியாபாரமளிகைகளை ஸ்தாபித்துத் தங்களது இரண்டாவது கோட்பாட்டை நிறைவேற்றல்.

14. இந்தஸ்தாபனம் அங்கத்தினர்களது நன்னடக்கையையும் சுகவாழ்வையும் வளரச்செய்யும் என்ற நம்பிக்கையுடன் இருத்தல்.

இக்கூட்டத்தார்க்கு 'நியாயவாதிகள்' என்ற பெயர் பொருத்தமானது என்பதை அவர்களது ஆறுவதுகோட்பாடு வலியுறுத்தும். இவர்கள் கடன்விஷயத்திற் பெரிதும் எச்சரிக்கையுடன் இருந்தார்கள். 'கடன் கொடுத்த ஷைலக் என்பவன் வெனிஸ்வர்த்தகனுடைய குடலைக்கேட்டதைக்காட்டிலும், உணவுப்பொருள்களைக் கடன்கொடுத்த வியாபாரிகள் தங்களிடம் கடன்பட்டவர்களது குடலைக்கேட்பது நியாயமானது' என்

பது. இவர்கள் கருத்து. "குடிப்பதால் உண்டாகும் தீமையைவிடக் கடன்படுவதால் வரும்தீமை குறைந்ததாகாது. ஆனால், ஏழை ஜனங்கள் இதை ஒருபொருட்டாக எண்ணுகிறார்களில்லை. முதலாளிகளோ தங்களிடம் வேலைசெய்யும் தொழிலாளர்களைக் கடன்படாதவர்களாகச் செய்யப் பாடுபடுவதில்லை. ஆனால், கடன்பட்டு வேறுகதியற்றவர்களாகி விட்டால் அவர்களுக்குத் தங்கள் சுயலாபத்தைக்கருதிச் சிலதருமமாக உதவிசெய்கிறார்கள். இது, நோய்அதிகமானதற்குப்பிறகு மருந்து கொடுப்பதுபோலாகிறது. நோய்வராமலே தடுப்பது மேலானதா? வந்த பிறகு, அதிலும் அதிகமானபிறகு, மருந்துகொடுத்துத் தடுக்கப்பார்ப்பது மேலானதா? இக்கடனாகிய பேய் ஒருவனைப் பற்றிவிடுமாயின் அது அவனைப் பெரிதும் துன்புறுத்தும். கடன்படுதல் அடிமைத்தனத்திற்கு ஒப்பாகும். ஆதலின் இக்கடன் தொல்லையிலிருந்து அங்கத்தினர்களைக் காக்கவேண்டும்" என்பது கருதி இக்கூட்டத்தார் கடன் கொடுத்தும், வாங்கியும் வரும் வழக்கத்தை முற்றும் நீக்கியுள்ளார்கள். இவை இவர்களுடைய கொள்கைகளுள் முக்கியமானவை.

இத்தகைய கோட்பாட்டினையுடைய இக்கூட்டத்தார் தங்களது வியாபாரத்தொழிலை இருபத்தெட்டு அங்கத்தினர்கள்சேர்ந்து இருபத்தெட்டுப்பவுனை மூலதனமாகக்கொண்டு முதன்முதல் ராஸடேல் பட்டணத்தில் வருஷத்திற்குப் பத்துப்பவுன் வாடகைகொடுப்பதாக ஓரிடத்தை அமர்த்திக்கொண்டு (21—12—1844) தொடங்குவதாக முடிவுசெய்தனர். இவர்களது நிலைமையைக்கண்ட 'கியாஸ்லைட்' கடைக்காரர் 'இவர்களாற் கூலிகொடுக்கவும் முடியாது' என்று கருதி விளக்குக் கொடுக்கக்கூட மறுத்துவிட்டனர். அங்கத்தினர்களே தாராளமாய்த் திறப்புக்கொண்டாட்டத்திற்குவரத் தங்களது ஏழைமைநிலையைக் கண்டு வெட்கப்பட்டனர். பெரியவியாபாரிகள் இவர்களதுதொழிலைப் பார்த்துப் பழிப்பதற்காகக் கூடியிருந்தார்கள். பண்டகசாலையைத் திறப்பதற்கு ஒருவரும் துணிந்து முன்வரவில்லை. இந்நிலையில், ஒரு தைரியமுள்ள வாலிபஅங்கத்தினர் அதனைத் திறந்துவைத்தார். உடனே, அந்த ஏழைநெசவுத்தொழிலாளர்களின் சிறுவர்கள் 'இந்த ஸ்தாபனம் இனிது தழைத்தோங்கி வாழ்வதாக' என வாழ்த்துக்கூறினார்கள். அக்காலத்தில் இவ்வளவு இடையூறுகளுக்கிடையில் இந்த ஸ்தாபனம் ஸ்தாபிக்கப்பட்டிராவிடின் இப்பொழுது, இரண்டுதலைமுறைகளுக்குப் பின்வந்த அவர்களது பரம்பரையினர் நல்லுணவையும், நல்லாடையையும்

பெற்றுச் சுகவாசிகளாய்ச் சுதந்தரபுருஷர்களாய் வாழ்ந்துவரமுடியாது. இந்தத்தலைமுறையாரது அதிர்ஷ்டத்தால் அந்தக்காலத்தில் இந்த ஸ்தாபனம் நிலைபெறுவதாயிற்று. இங்ஙனம் தொடங்கிய இக்கூட்டத்தார்க்கு அதிசீக்கிரத்தில் தங்களது ஆரம்பதசையிலேயே 'தங்களது ஏழைமை நிலையோடுகூட வேறு பல பகைமைகளும் தங்களுக்கு உண்டு' என்பது வெளியாயிற்று. வேண்டியபொருள்களை நல்லனவாகப் பெறமுடியவில்லை. அங்கத்தினர்களிற் பலர் அயல்வியாபாரிகளிடம் கடன்பட்டிருந்தனர். கடன்படாதசிலரும் தங்களது கடமையை நன்குணர்ந்து வேண்டியவற்றைச் சரியாக வாங்காதவர்களாயிருந்தனர். 'சரியான அளவு, நிறை, நடுநிலைமை ஆகியவற்றைக்கொண்டு நடைபெறுகிறது' என்பதை அறிந்துவைத்தும் 'அயலிற் சிறிது விலைகுறைவாக இருக்கின்றது' என்ற காரணத்தாலும், வேறு காரணங்களாலும் எந்த ஏழைகளுக்காக இது ஏற்பட்டதோ அந்த ஏழைகள் அதிகமாக இதிற் சம்பந்தப்படாமல் நிற்கத் தலைப்பட்டார்கள். அந்தப் பொல்லாத அயல்வியாபாரிகளும் வேண்டுமென விலையைக் குறைத்து விற்றுவந்தார்கள். 'எப்பொழுதும் குறைந்தவிலைக்குக்கொடுப்பவரிடம் மோசச்செயல் இல்லாதிருக்க முடியுமா?' என்றுகூட அங்கத்தினர்களாகிய அவர்கள் உணரவில்லை. 'எவ்வளவுதீமைவந்தாலும் அதனை அனுபவிக்க உடன்படுகின்ற இந்த ஏழைகள், தீமைவராதிருக்க ஒருவழியைக்காட்டினால் அதனைப் பின்பற்றி நடக்க மறுக்கின்றார்களே' என்று அவர்களது நிலைமையைக்குறித்துப் பொறுப்புள்ளவர்கள் இரங்கினார்கள். முதலில் அங்கத்தினர்களுக்கு வேண்டிய கோதுமைமா, சர்க்கரை, வெண்ணெய், இறைச்சி என்ற நான்குமே விற்கப்பட்டுவந்தன. இந்த இயக்கத்தில் விசேஷநம்பிக்கைவைத்த சிலரே எவ்வளவு இடையூறுகள் நேர்ந்தாலும் அவை அனைத்தையும் பொறுத்து அங்குத் தங்களுக்குவேண்டியவற்றை வாங்கிவந்தார்கள். அவர்களது ஊக்கத்தாலேயே அது உறுதிபெறுவதாயிற்று. இந்நிலையில், விடாதுசாமான்வாங்கி உறுதியுடன் இருந்துவந்த ஒருவர் ஒரு நிர்வாகக்கூட்டத்தில் 'சாமான்வாங்காது அங்கத்தினராகமாத்திரம் இருந்துவருபவரை விலக்கிவிடல்வேண்டும்' என ஒரு தீர்மானங்கொண்டுவந்தார். அது, 'நமது சங்கத்திற்சேர்ந்ததற்காக ஒருவர் தமதுசுதந்தரத்தை இழந்துவிடமுடியாது; சுதந்தரம் எல்லாவற்றிற்கும் மேலானது' என்று மறுக்கப்பட நிறுத்திக்கொள்ளப்பட்டது. இந்தப் பண்டகசாலை இப்பொழுது (1916) இருபத்தோராயிரத்தெண்ணூறு அங்கத்தினர்களைக்

கொண்ட நாற்பத்தெட்டுக் கிளைச்சங்கங்களைப் பெற்றிருக்கிறது. சற்றேறக்குறைய அப்பட்டணத்தின் ஜனத்தொகைக்கு மூன்றிலொருபங்கிற்கு இதன் அங்கத்தினர்களின்தொகை வந்துவிட்டது. இன்றைக்கோ இன்னும் அதிகமாயிருக்கிறது என அறியப்படுகிறது. மனிதவாழ்க்கைக்கு வேண்டிய எல்லாப்பொருள்களும் இப்பண்டகசாலையிற்கிடைக்கின்றன. இதற்குச்சொந்தமாகப் பல பெரியகட்டிடங்களும், பலவிளைநிலங்களும், கப்பல்களும்,புகைவண்டிகளும்,பன்னீராயிரம்புத்தகங்களைக்கொண்ட ஒரு புத்தகசாலையும், பலபத்திரிகைகளும் கிடைக்கக்கூடிய ஒருவாசகசாலையும், இரண்டாயிரம்ஜனங்கள்கூடக்கூடிய ஒரு பெரிய பிரசங்கமண்டபமும் உண்டு. 'கூட்டுறவுமுறையில் இந்த ஒருசங்கம் மாத்திரம்தான் வளர்ந்திருக்கின்றது' என்று எண்ணிவிடலாகாது. இதைப்பார்த்துத் தொடங்கப்பட்டனவாகச் சற்றேறக்குறைய நாற்பதுலட்சம் அங்கத்தினர்களைக்கொண்ட ஆயிரத்தைந்நூறுபண்டகசாலைகள் இப்பொழுது இங்கிலாந்தில்மாத்திரம் இருக்கின்றன. இந்த ராஸ்டேல்முறையும், முற்கூறிய ரைபீஸன்முறையும் நாளடைவில் ஐரோப்பா முழுவதிலும் பரவி ஏழைஜனங்களுக்குப் பெரிதும் நன்மையைச் செய்துவருகின்றன.

### 5. பிறநாடுகளிற் கூட்டுறவுஇயக்கத்தின் பரவுதல்.

இப்படியாக, ராஸ்டேல் நெசவுத்தொழிலாளர்வழிகாட்டிய இக்கூட்டுறவுவிதையானது நாளடைவில் ஐரோப்பாமுழுவதும் பரவுவதாயிற்று. அதன்வளர்ச்சி பத்துவருஷத்திற்குள் ஒன்றிற் கிரண்டாக உயர்ந்துவிட்டது. இப்பொழுதோ இந்தஇயக்கத்திற் சற்றேறக்குறைய ஒரு கோடி பங்குக்காரர்கள் இருக்கிறார்கள். அப்பால், 'இந்த இயக்கசம்பந்தமாகக்கூடிய மகாநாட்டில், இருபத்துநான்குதேசங்களிலிருந்து இரண்டு கோடிபங்குக்காரர்களையுடைய ஒருலட்சத்துமுப்பதினாயிரம்சங்கங்களின் பிரதிநிதிகள் வந்திருந்தார்கள்' என்று சொல்லப்படுகிறது. துரைத்தனஉத்தியோகஸ்தர் அல்லாதவர்களின் பிரதிநிதிக்கூட்டமாக இவ்வளவுபெரியகூட்டம் வேறு எந்தவழியிலும் எவ்விடத்திலும் கூடியதில்லை.

இங்ஙனம், பரவிய இந்த இயக்கம் ஐரோப்பாவிலுள்ளபலவகைத் துரைத்தனத்தின்கீழ் வாழும் பலவகைஜாதியாரிடத்திலும் பரவி அவர்களுக்கு நற்பயனை விளைத்துவருகின்றது. ஜர்மனியில் ரைபீஸன்முறையிலும், இங்கிலாந்தில் ராஸ்டேல் முறையிலும்,பிரான்ஸிலும் பெல்ஜியத்தி

லும் உற்பத்திமுறையிலும், டென்மார்க்கிலும் அயர்லாந்திலும் விவசாய முறையிலுமாக இந்த இயக்கம் ஒவ்வொருதேசத்தில் ஒவ்வொருதுறையிற் பற்றுமிக்குள்ளதாகிப் பரவிவருகிறது. சண்டைக்குப்பிறகு இந்த இயக்கம், சண்டையிற் சம்பந்தப்பட்டும் படாமலும் இருந்த எல்லாநாடுகளிலும் இன்னும் பலமடங்காக வளர்ந்திருக்கின்றது. அவற்றில் தற்காலம் இந்தப்பண்டகசாலைமுறையில்மாத்திரம் அங்கத்தினர்களின் தொகை சுமார் நான்குகோடிமுதல் ஐந்துகோடிவரையில் வளர்ந்திருப்பதாக அறியப்படுகிறது. இக்கோடிக்கணக்கான எண்ணிக்கையே இந்த இயக்கத்தின்பெருமையை உறுதிப்படுத்தும். மேல்நாடுகளிலுள்ள ஒவ்வொருதலைநகரங்களிலும் இப்பண்டகசாலைகளின் உபயோகத்துக்காகப் பல மொத்தக்கூட்டுறவுமளிகைகள் இருக்கின்றன என்பது இங்கு அறியத்தக்கது.

இக் கூட்டுறவுப்பண்டகசாலை இயக்கம் 'ஜனங்களது விசேஷத் திறமையால் இங்கிலாந்தில்மாத்திரம்தான் பயன்தரமுடியும்' என்று சொல்லப்படுகிறது. இது பொருந்தாது. எங்ஙனமெனில், இந்த இயக்கம் 'இங்கிலாந்தில் நல்லபயனைத் தந்துவருகிறது'என்பதை அறிந்ததும் (1864) ஜர்மனியில் இது பெரிதும் பரவத்தொடங்கியது. பல சங்கங்கள் தோன்றின. அவற்றுள், அறுபத்தையாயிரம்அங்கத்தினர்களையுடைய 'லைப்ஸிக்' பண்டகசாலையும், எழுபத்தொன்பதினாயிரம் அங்கத்தினர்களையுடைய 'ஹாம்பர்க்' பண்டகசாலையும், ஒருலட்சம் அங்கத்தினர்களையுடைய 'ப்ரஸ்லா' பண்டகசாலையும் சேர்ந்திருக்கின்றன. உலகத்திலுள்ள பண்டகசாலைகளுக்கெல்லாம் மிகப்பெரியபண்டகசாலை இந்த 'ப்ரஸ்லா' பண்டகசாலையே. இந்த இயக்கத்திலே 'துரைத்தன உத்தியோகஸ்தர்கள் அங்கத்தினர்களாக இருத்தல்கூடாது' என்ற தடையை, இந்தப் பெரியசண்டைக்குப்பிறகு இதனாலுண்டாகும் நன்மையைக்கருதித் துரைத்தனத்தார் நீக்கிவிட்டனர். இதனால் இப்பொழுது அங்கே ஒவ்வொரு 'சோஸைட்டி'யிலும் அங்கத்தினர்களின் தொகை பெருகிக்கொண்டேவருகிறது. முற்கூறிய 'லைப்ஸிக்' பண்டகசாலை அறுபத்தையாயிரத்திலிருந்து இப்பொழுது தொண்ணூறாயிரம் அங்கத்தினர்களைக்கொண்டதாக இருக்கின்றது என்பது குறிப்பிடத்தக்கது. (தொடரும்.)

---

# ‘முன்னமேமுனியாகி’என்றதற்குச் சரிதம்.

---

திருநாவுக்கரசுநாயனார் புராணம். ௪௮-ங் கவி.

“மன்னுதபோ தனியார்க்குக்கனவின்கண்மழவிடையா
ருன்னுடையமனக்கவலையொழிநீயுன்னுடன்பிறந்தான்
முன்னமேமுனியாகியெனையடையத்தவமுயன்றா
னன்னவனையினிச்சூலையடுத்தாள்வமெனவருளி”

இதில் ‘முன்னமே முனியாகி’ என்ற விருத்தாந்தம் கீழ்வருமாற்றானறியப்படும்.

ஆரியாவர்த்தத்திலுதித்து வேதவேதாங்கங்களை யோதியுணர்ந்த சிவபக்தராகிய சுதபாமுனியென்பவர், நருமதா தீரத்தில் வசித்துக்கொண்டிருந்த காந்தரென்னு முனிவர் தன்மாணவர்களுக்கு உபநிடதங்களின் அர்த்தமாகிய ஜீவான்ம பரமான்ம ஐக்கியத்தை உபதேசிக்குங்கால் அவருழைச் சென்று வேதம் அப்பிரமாணியமென்று சைனமதத்தைப் பிரசங்கஞ் செய்தனர். அப்பொழுது அம்முனிவர் வெகுண்டு “நீ வேத பாஹ்யனாய்ச் சைனமதத்திற் பிரவேசி” பென்று சபித்தனர். அதனால் அம்முனிவர் சைனமதத்தில் பிரவேசித்தனர் என்று அகத்திய பக்த விலாசத்திற் கூறப்படும்.

ஜி. சதாசிவம்பிள்ளை.
நாகை நீலலோசனிப் பத்திராதிபர்.

---

மாண்பென்பதுவேமாட்சியாகும் ௩
மாதவிதானேகுருக்கத்தியாகும் ௪
மாமாத்திரரேமருத்துவராகும் ௫
மாயாபுரியேபித்தளையாகும் ௬
மால்பென்பதுவேகண்ணேணியாகும் ௭
மாலதிதானேமல்லிகையாகும் ௮
மாவிளந்தானேகூவிளமாகும் ௯
மாந்தியென்பதுமாமரமாகும் ௧௦
மாழாம்பலமேயனந்தலாகும் ௧௧
மானமாவென்பதுகவரிமாவாம் ௧௨
மாளுதலென்பதுதுஞ்சலாகும் ௧௩
மான்றல்தானேமயக்கமாகும் ௧௪

மாமுதலொருபேர்முற்றும்.

மாமுதலிருபெயர்

மாந்திகுளிகன்மாமரமிருபேர் ௧௫
மாடமேமனையுழுந்திருபேரே ௧௬
மாடகமேமுறுக்காணியும்யாழும் ௧௭
மானியென்பதுகாதலுமகளிரும் ௧௮
மாயமேபொய்வஞ்சனையிருபேர் ௧௯
மாலியேகள்ளிரவியிருபேர் ௨௦
மாவலியேயானிலையுமோரசுரனும் ௨௧
மானவரென்பதாண்மைப்பெயரு
மானவரெனவுமருவுமிருபேர் ௨௨
மாலமேபேய்குங்குமமிருபேர் ௨௩
மாய்வேமறைவுஞ்சாவுமிருபெயர் ௨௪
மாதவமென்பதுதவமும்வசந்தமும் ௨௫
மானேமானுமுருவுமிருபெயர் ௨௬

மாமுதலிருபேர்முற்றும்.

மாமுதன்முப்பெயர்

மாருதியனுமன்வீமன்மகளிர் உஎ

மானலென்பதுமபக்கமுமொப்பு
மிலச்சையுமெனவேமிசைக்குமுப்பேர் உஅ

மாலரென்பதுமெய்புகுகருவியும்
புலையரும்வேடரும்போற்றுமுப்பேர் உகூ

மாமுதன்முப்பேர்முற்றும்.

மாமுதனாற்பெயர்

மாதங்கந்தானிளமையுமானைய
முருவமுங்கடனுமோதுநாற்பேர் ௩0

மாசுதானேகுற்றங்கோழை
மழையழுக்குடனேமருவுநாற்பேர் ௩க

மாமுதனாற்பேர்முற்றும்.

மாமுதலைம்பெயர்

மாட்சிதானேதிருந்தலுமமைதியு
நீர்ப்புமாண்புங்குற்றமுமைம்பேர் ௩உ

மாரிதானேமேகமும்வியாதியுங்
கள்ளும்விளிவுமோடியுமைம்பேர் ௩௩

மாதிரமென்பதுதிசையுமலையும்
வானுந்தும்பியுமண்டிலமுமைம்பேர் ௩௪

மாதரேயிடைச்சொல்லுமாதருங்
காதலுமழகும்பொன்னுமைம்பேர் ௩௫

மார்க்கமேமறுதலையுமுலமும்
வழியுஞ்சமயமும்வீதியுமைம்பேர் ௩௬

மாமுதலைம்பேர்முற்றும்.

மாமுதலறுபெயர்

மானமென்பதுசவாதும்பெருமையுங்
குற்றமுமளவுங்கத்தூரியுட
னிலச்சையுமெனவேயிசைக்குமறுபேர் ௩எ

மாடேபக்கமுஞ்செல்வமும்பொன்னு
நிரையுமணியுஞ்சீதனமுமாம் ௩அ

மாலேதானேயந்தியுமிரவியும்
பூவால்மணியாற்பொன்னாற்சொல்லாற்
றெடுத்ததொடையுமொழுங்குமியல்பு
மாலிகையெனவுமருவுமறுபேர் ௩௯

மாமுதலறுபேர்முற்றும்.

மாமுதலெழுபெயர்

மாழைதானேயாயமுமடமையும்
பொன்னுமோலேயுமுலோகக்கட்டியும்
புளிமாவுடனேயேருமேழ்பேர் ௪0

மாமுதலேழ்பேர்முற்றும்.

மாமுதற்பதினொருபெயர்

மாலென்பதுவேமாயனுமயக்கமும்
புதனும்பெருமையுமேகமுங்காற்றும்
பழமையும்வேட்கையும்வெற்புங்கருமையுங்
கண்ணோணியுமெனப்பதினொருபெயரே ௪க

மாமுதற்பதினொருபேர்முற்றும்.

மாமுதற்பதினைந்துபெயர்

மாவென்பதுவேயாணியும்பெருமையு
மிருகமும்வண்டுந்துகிலுஞ்செல்வமு
மொருமாவுடனேயழைத்தலுங்கறுப்பும்
வெறுப்புங்குதிரையுநிறமுநென்மாவு
மொருமாமுங்கமலேயும்பதினைம்பெயர் ௪௨

மாமுதற்பதினைம்பேர்முறறும்.

மாமுதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—கடுக.

மிம்முதற்பலபெயர்ச்சூத்திரம்

மிம்முதலொருபெயர்

மிஞ்சிகையென்பதுகுண்டலமாகும் க
மிலேச்சர்தானேயாரியரெனப்படும் ௨

மிலைத்தலென்பது சூடுதலாகும் ௩
மிழற்றலேசிரம்பாமென்சொல்லாம் ௪

மிம்முதலொருபேர்முற்றும்.

மிம்முதலிருபெயர்

மிஞ்சேமிகுவதுவண்டுமிருபேர் ௫
மிதவையென்பதுதெப்பமுஞ்சோறும் ௬
மிச்சிலேயொழிபொருளுமெச்சிலும் ௭
மிளையேயரணுங்காவற்காடும் ௮
மிகையென்பதுவேவேதனைசெய்தலுந்
துக்கமுமெனவேசொல்லுமிருபேர் ௯
மிற்கேமிரையுமெத்தகவுமிருபேர் ௧௦

மிம்முதலிருபேர்முற்றும்.

மிம்முதன்முப்பெயர்

மிடனென்பதுவேமகனும்வலியுஞ்
சந்திரனெனவுஞ்சாற்றுமுப்பேர் ௧௧

மிம்முதன்முப்பேர்முற்றும்.

மிம்முதனாற்பெயர்

மிக்கவையேயூணடிசினிறைத
னியாயமல்லாதவையெனநாற்பேரே ௧௨

மிம்முதனாற்பேர்முற்றும்.

மிம்முதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—௪௯௩.

மீமுதற்பலபெயர்ச்சூத்திரம்

மீமுதலொருபெயர்

மீமிசையென்பதுமேலெனலாகும் ௧
மீக்கோளேமேற்போர்வையாகும் ௨
மீக்கூறலென்பதுமேம்பாடாகும் ௩

மீமுதலொருபேர்முற்றும்.

மீமுதலிருபெயர்

மீனேயுடுவுமச்சமுமிருபேர் ௪

மீமுதலிருபேர்முற்றும்.

மீமுதலறுபெயர்

மீளியேதிண்ணியனும்வலியும்
பெருமையுங்கூற்றும்பாலேத்தலைவனு
மேன்மகனெனவும்விரிக்குமறுபெயர் ௫

மீமுதலறுபேர்முற்றும்.

மீமுதற் பலபெயர்ச்சூத்திரமுற்றும்.

ஆகச்சூத்திரம்—கசுஅ.

மும்முதற்பலபெயர்ச்சூத்திரம்

மும்முதலொருபெயர்

முகமனேயுபசாரமாகும் க
முகடியேமூதேவியாகும் உ
முகிழென்பதுவேபூமொட்டாகும் ௩
முசலந்தானேயிருப்புலக்கைப்பெயர் ௪
முகையென்பதுவேபூமொட்டாகும் ௫
முகுந்தனென்பதுமாயனாகும் ௬
முசலிகைதானேயுடும்பெனலாகும் ௭
முசுண்டியென்பதுபடைக்கலமெனப்படும் ௮
முச்சியென்பதுமயிர்முடியாகும் ௯
முஞ்சலென்பதுமொய்த்தலாகும் க0
முடங்குளைதானேசிங்கமெனப்படும் கக
முராரியென்பதுதிருமாலாகும் கஉ
முடுக்கரென்பதுமலையின்முழையாம் க௩
முதுவர்தானேமூத்தோராகும் க௪
முதுமகனென்பதுசனியனாகும் க௫

முதைபாருனேமுது காடாகும் கஎ
முதைப்புனமேபழங்கொல்லையாகும் கஎ
முந்துறுமென்பதுமூங்கிலாகும் கஅ
முத்தலையென்பது சூலமாகும் கக
முதைபேவெட்டுக்காடெனப்படுமே உ0
முக்குடுமியென்பது சூலமெனப்படும் உக
முரற்றுமந்தானேகுடமெனப்படுமே உஉ
முயக்கமேபாலிங்கனமாகும் உங
முருக்குதலென்பதுகோறலாகும் உச
முருகியமென்பதுகுறிஞ்சிப்பறையாம் உரு
முழுமகனேயறிவில்லானெனப்படும் உசு
முழவுதானேவாச்சியமெனப்படும் உஎ
முழுவலையுந்தான்வென்றியாகும் உஅ
முறுவலென்பதுநகுதலாகும் உகூ
முனையரிடமேபாலைநிலமாகும் ங0
முனிவரென்பது துறந்தோர்பேரே ஙக
முந்நீரென்பதுகடலெனப்படுமே ஙஉ
முன்றிறுனேமுற்றமாகும் ஙங
முச்சியரேயுறைகாராகும் ஙச
முப்புரமென்பது திரிபுரமாகும் ஙரு
முப்புரிநூலோர்வேதியராகும் ஙசு

மும்முதலொருபேர்முற்றும்

மும்முதலிருபெயர்

முகமேயிடமுமுகமுமிருபேர் ஙஎ
முடிவல்பெண்ணுஞ்செந்நாயாகும் ஙஅ
முரசமேவாச்சியமுமுரசும் ஙகூ

முந்தென்பதுவேவெண்குருகுடனே
முந்துமெனவேமொழியுமிருபேர் ௪0

முருந்தேயிறகினடியிற்குருத்துந்
தவளமுமெனவேசாற்றுமிருபேர் ௪௧

முன்னமேசிக்கிரியுமெண்ணமும் ௪௨

முன்னையேமுன்றேன்றலுமுன்னையும் ௪௩

முசலிதானேதாழையுமோந்தியும் ௪௪

முன்னலென்பதுநினைவுநெஞ்சமும் ௪௫

முன்பேவலியுமுன்புமிருபேர் ௪௬

முரணேவலியும்பகையுமிருபேர் ௪௭

முற்றேமுழுவதும்விளைவதுமிருபேர் ௪௮

மும்முதலிருபேர்முற்றும்.

மும்முதன்முப்பெயர்

முடங்கலென்பதுமடங்கலுந்தாழையு
மூங்கிலுமெனவேமொழியுமுப்பேர் ௪௯

முடவனென்பதுவேயருணனுஞ்சனியு
முடவனுமெனவேமொழியுமுப்பேர் ௫0

முரசேயுத்திரட்டாதியும்பறையும்
பேரிகையெனவும்பேசுமுப்பேரே ௫௧

முன்னையென்பதுவேபிள்ளையுமூங்கிலு
மங்குரமெனவுமாகுமுப்பேரே ௫௨

முறியென்பதுவேயிலையுந்தளிரு
முறியுமென்றேமுப்பெயர்கூறும் ௫௩

மூரம்பேபாலடுத்துயர்ந்தநிலமு
மேடும்பாறையுமேவுமுப்பேரே ௫௪

முதலேமூலியுங்கையினின்முதலு
முதலுமென்றேமொழியுமுப்பேரே ௫௫

மும்முதன்முப்பேர்முற்றும்

மும்முதனாற்பெயர்

முனிபேயிருடியும்யானையின்கன்றும்
வில்லுமகத்தியுமேவுநாற்பேரே ருசு

முத்தந்தானேயுதடும்பிரியமு
முத்துமருதநிலமுநாற்பேர் ருஎ

முடைபேராற்றங்கோணிகைபேடகம்
பொதியனெனவும்புகலுநாற்பேர் ருஅ

முறைபேயூழுமுறையுக்குணமும்
புத்தகமெனவும்புகலுநாற்பேர் ருகூ

முனைபேயிறைமையும்பகையும்வெறுப்பு
முனையுமெனவேமொழியுநாற்பேர் சுo

மும்முதனாற்பேர்முற்றும்

மும்முதலைம்பெயர்

முல்லைபென்பதுவேமோடுபடுவென்றியு
முல்லைநிலமுங்கானமல்லிகையுங்
கற்புடைமையுடனிசையுமைம்பேர் சுக

முற்றலேசூழ்போதலும்வெறுத்தலு
முடிவுமுதுமையும்விளைத்தலுமைம்பேர் சுஉ

மும்முதலைம்பேர்முற்றும்.

மும்முதலறுபெயர்

முளரிபேதாமரையும்விறகுங்
காடுஞ்சிறுமையுஞ்செந்தீயுடனு
முண்மாமெனவுமொழியுமறுபெயர் சுஙு

மும்முதலறுபேர்முற்றும்.

மும்முதலெழுபெயர்

முடலைதானேயுண்டையுந்திரட்சியு
முருடுங்கழலையும்பெருங்குறடுடனே
பெருமையுமுடைநாற்றமுமெனவேழ்பெயர் சுச

மும்முதலேழ்பேர்முற்றும்.

மும்முதலெண்பெயர்

முண்டகமென்பது தாழையுங்கள்ளுங்
கடலுநெற்றியுமம்போருகமு
முண்மூலமுமீர்முள்ளியுடனு
முத்தகமெனவுமொழியுமெண்பேர் கூடு

மும்முதலெண்பேர்முற்றும்.

மும்முதற்பத்துப்பெயர்

முருகென்பதுவேயிளமையுநாற்றமுங்
குகனும்விழாவும்வனப்புமகிலு
மெழுச்சியுநாரையும்வெறியாட்டாளனு
மெலுமிச்சமெனவுமொருபது பெயரே கூகூ

மும்முதற்பத்துப்பேர்முற்றும்.

மும்முதற்பலபெயர்ச்சூத்திர்முற்றும்.

ஆகச்சூத்திரம்— உ௩௪.

மூமுதற்பலபெயர்ச்சூத்திரம்

மூமுதலொருபெயர்

மூடனேயறிவில்லோன்பெயரே க
மூதணங்கென்பது காடுகாளாகும் உ
மூதையேவெட்டிச்சுடுங்காடு ௩
மூதலென்பது மூடுதலாகும் ௪

மூமுதலொருபேர்முற்றும்.

மூமுதலிருபெயர்

மூசலேமொய்த்திடல்சாவிருபேர் ௫

மூமுதலிருபேர்முற்றும்.

மூமுதனாற்பெயர்

மூரலென்பதுவேயெயிறுஞ்சோறு
நகையுஞ்சொல்லுநாட்டுநாற்பேரே ௬

மூமுதனாற்பேர்முற்றும்.

மூமுதலறுபெயர்

மூலந்தானேயேதுவுங்கிழங்கும்
வேருமுதலுமோர்நாளுடனு
மோர்கோவெனவுமோதுமறுபெயர் ௭

மூரியென்பதுவேயாற்றலும்பெருமையு
மெருமையுடனேயேறுநெரிவுந்
தொன்மையுமெனவேசொல்லுமறுபெயர் ௮

மூமுதலறுபேர்முற்றும்.

மூமுதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்--உசஉ.

மெம்முதற் பலபெயர்ச் சூத்திரம்

மெம்முதலொருபெயர்

மெல்லம்புலம்பனெநெய்தற்றலைமகன் க

மெம்முதலொருபேர்முற்றும்.

மெம்முதலிருபெயர்

மெத்தையேசட்டைமெல்லணையிருபேர் உ

மெம்முதலிருபேர்முற்றும்.

மெம்முதனாற்பெயர்

மெய்யேயுடலுமுண்மையுமொற்றுஞ்
சொற்பொருளெனவுஞ்சொல்லுநாற்பேர் ௩

மெம்முதனாற்பேர்முற்றும்.

மெம்முதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்---உசரு.

மேமுதற் பலபெயர்ச் சூத்திரம்

மேமுதலொருபெயர்

மேதினியென்பதுபூமியாகும் க
மேதிதானேபெருமையாகும் உ
மேற்கோளேசனியாகுமென்ப ௩

மேகமென்பதுமுகிலெனப்படுமே ச
மேவலர்தானேயொன்னாராகும் ரு
மேலுலகந்தான்விண்ணுலகெனப்படும் சு
மேலோரென்பதுவேதியராகும் எ

மேமுதலொருபேர்முற்றும்.

மேமுதலிருபெயர்

மேகலைதானேயரைப்பட்டிகையுந்
தூசுமெனவேசொல்லுமிருபேர் அ
மேழகமென்பதுகவசமுந்தகரும் கூ
மேழையென்பதுகஞ்சியுங்காடியும் க0
மேக்கேமேற்குமேலுமிருபேர் கக

மேமுதலிருபேர்முற்றும்.

மேமுதலறுபெயர்

மேதையேபேரறிவுந்தோலும்
புதனுமிறைச்சியுமேற்றப்பாடு
மேம்பாடெனவும்விதிக்குமறுபேர் கஉ

மேமுதலறுபேர்முற்றும்.

மேமுதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—உடுஎ.

மைம்முதற் பலபெயர்ச் சூத்திரம்

மைம்முதலொருபெயர்

மைந்துதானேவலியெனலாகும் க
மைம்மையேமலடாமெனவிசைப்பர் உ
மைப்புயலெனலேயிருண்டமேகமாம் ங

மைம்முதலொருபேர்முற்றும்.

மைம்முதலேழ்பெயர்

மையெனலேயஞ்சனமுங்குற்றமு
மேகமுமலடுங்கறுப்புமிளமையுந்
தகருமெனவேசாற்றுமேழ்பேர் ச

மைம்முதலேழ்பேர்முற்றும்.

மைம்முதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—உசுக.

மொம் முதற் பலபெயர்ச் சூத்திரம்.

மொம்முதலொருபெயர்

மொத்தமென்பதுபொதுவெனலாகும் க
மொக்குளேநீர்க்குமிழியாகும் உ
மொள்ளலென்பதுமுகத்தலெனப்படும் ௩.

மொம்முதலொருபேர்முற்றும்.

மொம்முதலிருபெயர்

மொய்ம்பேதோளும்வலியுமிருபேர் ச

மொம்முதலிருபேர் முற்றும்.

மொம் முதன் முப்பெயர்

மொய்த்தலென்பதுகொடுத்தலுமிருத்தலு
முடுதலெனவுமொழியுமுப்பேர் ரு

மொம்முதன்முப்பேர்முற்றும்.

மொம்முதலைம்பெயர்

மொய்யென்பதுவேயானையும்வண்டுந்
திரளுந்தாயுஞ்செருக்களமுமைம்பேர் சு

மொம்முதலைம்பேர்முற்றும்.

மொம்முதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—உசுஎ.

மோ முதற் பலபெயர்ச் சூத்திரம்.

மோமுதலொருபெயர்

மோகமென்பதுவேவிரகமாகும் க
மோடிதானேகாடுகோளாகும் உ
மோதகமென்பதுகொழுக்கட்டைப்பேர் ௩.
மோனமேபேசாமையாகும் ச

மோமுதலொருபேர்முற்றும்.

மோமுதன்முப்பெயர்

மோடென்பதுவேவயிறும்போழ்தலும்
மேடுமெனவேவிரித்திடுமுப்பேர் ரு

மோமுதன் முப்பேர்முற்றும்.

மோமுதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—உஎ௦.

மௌமுதற் பலபெயர்ச் சூத்திரம்.

மௌமுதலொருபெயர்

மௌவைதானே தாயெனலாகும் க

மௌனியரென்பது துறந்தோர்பேரே உ

மௌமுதலொருபேர்முற்றும்.

மௌமுதனாற்பெயர்

மௌலியேகோடீரமுஞ்சடையுந்
தாருந்தலைமுடியுஞ்சாற்றுநாற்பேர் ௩

மௌமுதனாற்பேர்முற்றும்.

மௌமுதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—உஎஙு.

கலையாவையுமுணர்காவியத்தொடையான்
புலியூர்ச்சிதம்பரரேவணசித்தன்
பாவியமகராதித்தொகுதியெட்டாவதி
லிருநூற்றெழுபத்தெண்சூத்திரமே.

எட்டாவது

மகராதிப்பெயர்த்தொகுதி முற்றும்.

ஒன்பதாவது

# யகராதிப்பெயர்த்தொகுதி.

மதவலிகீதமிதமுடன்மகிழ்ந்த
தேனுதாண்டவன்றிருவடியேத்தி
யகராதிப்பெயர்த்தொகுதியிசைப்பாம்

யம்முதற் பலபெயர்ச் சூத்திரம்

யம்முதலொருபெயர்

யசனமென்பதுவேவேள்வியாகும் க

யட்டிதானேபடைக்கலமாகும் உ

யம்முதலொருபேர்முற்றும்

யம்முதலிருபெயர்

யவனரென்பதுசித்திரகாருஞ்
சோனகரெனவுஞ்சொல்லுமிருபேர் ௩

யம்முதலிருபேர்முற்றும்.

யம்முதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—௩.

யாமுதற் பலபெயர்ச் சூத்திரம்

யாமுதலொருபெயர்

யாகமென்பதுவேவேள்வியாகும் ௧
யாக்கென்பதுவேயெங்கெனலாகும் ௨
யாக்கர்தானேயிராக்கதராகும் ௩
யாதுதானவரேயிராக்கதர்போரம் ௪
யாதென்பதுவேயையுறவாகும் ௫
யாமளையேமாகாளியாகும் ௬
யாயென்பதுவேதாயாராகும் ௭
யானமேவியாபரித்தலாகும் ௮
யாவையுமென்பதெல்லாமெனலாம் ௯

யாமுதலொருபேர்முற்றும்.

யாமுதலிருபெயர்

யாப்பேமுடிச்சும்பாம்புமிருபேர் ௧0
யாண்டேவருடமெங்கெனவிருபேர் ௧௧
யாலமென்பதுவேயாச்சாமாமு
மிரவுமெனவேயிருபேராகும் ௧௨
யாளியேயிபஞ்சிங்கமிருபேர் ௧௩

யாமுதலிருபேர்முற்றும்.

யாமுதன்முப்பெயர்

யாமென்பதுவேவிக்ஙயுமிதுனமு
மசபதிநாளுமாகுமுப்பேர் ௧௪

யாணரென்பதுவேபுதுமையுந்தச்சரும்
வனப்புமென்றேமருவுமுப்பேர் கரு

யாமுதன்முப்பேர்முற்றும்.

யாமுதனாற்பெயர்

யாமமென்பதுவேயிரவுஞ்சாமமும்
பொழுதுந்தெற்கும்போற்றுநாற்பேர் கசு

யாமுதனாற்பேர்முற்றும்.

யாமுதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—கசு.

யும்முதலொருபெயர்

யுவதிதானேபெண்ணெனலாகும் க

யும்முதலொருபேர்முற்றும்.

ஆகச்சூத்திரம்—உ0.

யூமுதற் பலபெயர்ச் சூத்திரம்

யூமுதன்முப்பெயர்

யூபமேபடைவகுப்புங்கவந்தமும்
வேள்வித்தம்பமுமேவுமுப்பேர் க

யூமுதன்முப்பேர்முற்றும்.

யூமுதலைம்பெயர்

யூகமேயுடற்குறையுமோர்புல்லு
மோர்ந்திடுதர்க்கமுங்கரியகுரங்கும்
பெண்குரங்குடனேபேசுமைம்பேர் உ

யூமுதலைம்பேர்முற்றும்.

யூமுதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—உஉ.

யோமுதற் பலபெயர்ச் சூத்திரம்

யோமுதலொருபெயர்

யோகினியேமாகாளியாகும் க

யோமுதலொருபேர்முற்றும்.

யோமுதலிம்பெயர்

யோகமென்பதுவேயுயர்ச்சியுமுபாயமுந்
தியானமுங்கூட்டமுங்கூடலுமைம்பேர் ௨

யோமுதலிம்பேர்முற்றும்.

யோமுதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—உச.

யௌமுதலொருபெயர்

யௌவனந்தானழகெனலாகும் க

யௌமுதலொருபேர் முற்றும்.

ஆகச்சூத்திரம்—உரு.

பவமறத்தெளிந்தசிவதெரிசனத்தோன்
புவிமகிழ்சிதம்பரரேவணசித்த
னேத்தியயகராதித்தொகுதியொன்பானிற்
சூத்திரமுப்பத்தொன்றெனச்சொல்லுமே

ஒன்பதாவது

யகராதிப்பெயர்த்தொகுதி முற்றும்.

பத்தாவது

# வகராதிப்பெயர்த்தொகுதி.



சதுத்ததிமிளன்றனிச்சார்பிரமகத்தி
யிதத்துடன்கற்றுபட்டிசரைப்பரவியே
வகராதிப்பெயர்த்தொகுதியைவகுப்பாம்

வம்முதற்பலபெயர்ச்சூத்திரம்

வம்முதலொருபெயர்

வரிர்தலென்பதுவருத்தலாகும் க
வருமைதானேமகிழ்வாகும்மே ௨
வருந்தென்பதுவழியெனலாகும் ௩
வட்டைதானேவழியெனப்படுமே ௪

# வேதங்கள் தமிழில்.



வேதஸஞ்சிகை; ரிக்வேதமும் யஜுர்வேதமுமாகச் சேர்ந்து வெளிவருவது. வருஷசந்தா ரூபாய் ஆறு. மூன்றும்வருஷம் தொடங்கிவிட்டது. வருஷசந்தா தார்களுக்கு 2-ம் வருஷத்திய தொகுதி ரூ எட்டுக்கு அனுப் பப்பெறும். சில பிரதிகளே யிருப்பதால் வேண்டுவோர் உட னே மானேஜர், வேதபீரோ, ஆநந்தாச்ரமம், குன்னூர். ஆர். எஸ். நீலகிரி என்று எழுதிப் பெற்றுக்கொள்ளவும்.



# THE JAINA GAZETTE.

---

**(The Monthly Organ of the All-India Jaina Association.)**

---

This is a high class monthly edited in English and printed on superior glazed paper. It treats of all topics connected with Jain Religion, Philosophy, Metaphysics, Ethics and ancient Indian Literature. Translations of Ancient Scriptures and Original Essays on Dravidian Literature, Philology, and Culture, based on research are being contributed by eminent scholars. The Journal will be greatly useful to all people interested in the study of Religion, History, Philosophy and Literature.

Since our Gazette commands a very wide circulation in India, Europe, South Africa, America and Australia, it is also a very good medium for advertisements.

Annual Subscription is Rs. 3/ only. Sample Copy will be sent on receipt of 5 as. Stamps.

Apply to:—

The Manager,
THE JAINA GAZETTE,
21, Parish Venkatachala Iyer Street,
G. T., Madras.

The following books can also be had from "The Jaina Gazette Office."

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | Key of Knowledge | Rs. | 10 | 0 | 0 |
| 2. | Jaina Law | .... | 1 | 8 | 0 |
| 3. | Jainism | .... | 1 | 0 | 0 |
| 4. | House-holder's Dharma | .... | 0 | 12 | 0 |
| 5. | Soul | .... | 0 | 2 | 6 |

---